உ

கணபதி துணை.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவைகாவூர்ப் புராணம்.

வீரசைவகுலதிலகராகிய

கவித்தலம்

சி. வேலைய தேசிகரவர்களால்

அருளிச்செய்தது.

இராமானுஜபுரம்

தா. சிவலிங்கம் பிள்ளையவர்களால்

பிழையறப்பரிசோதித்து,

சில்விடங்களிற்புதுக்கி ஒவ்வொரு சருக்கத்திற்கும்

பொழிப்பாகவசனங்கள் செய்யப்பட்டு,

அனுமானல்லூர்

நா. வீராச்சாமிப்பிள்ளையவர்களால்

கும்பகோணம்

"ஸ்ரீவித்தியா அச்சுக்கூடத்திற்"

பதிப்பிக்கப்பட்டது.

௧௮௯௪ ௵ ஜூலை ௴

ஜய ௵ ஆடி ௴

இதன்விலை அணா ௪.

## விளம்பரம்.

இதனுலறிவிப்பதியாதெனின் இப்புத்தகம்வேண்டிஞேர் கும்பகோணம் பொய்யாதபிள்ளையார்கோயிற்றெரு ப. சபாபதி செட்டியாரவர்களிடத்திலும் ஷை தாலூக்கா இராமானுஜபுரம் தா. சிவலிங்கம்பிள்ளையவர்களிடத்திலும் அனுமானல்லூர் நா. வீராசசாமிப்பிள்ளையவர்களிடத்திலும் பெற்றுக்கொள்ளலாம். 10 புத்தகம் ஒருமிக்க வாங்குபவர்க்கு 1 புத்தகம் கூடக்கொடுக்கப்படும். போஸ்டு மூலமாக வேண்டுபவர் தபால்கூலியுள்பட அணு 5 புத்தகம் 1 க்கு அனுப்பவேண்டுவது.

இந்நூலரங்கேற்றினவரால் செய்யப்பட்ட பசுபதீச்சரமென்னுந் திருஆவூர்த் திரிபந்தாதி விலை அணு க.

பின்னரவர்கள் மாணாக்கரிலொருவராய், இலக்கியவிலக்கண வேதாந்தநூல்களில் மிகத்தேர்ச்சியுள்ளவராய் ஞானகுருவாய், கார்காத்தவேளாளகுலதிலகராய் விளங்கிய, இராமானுஜபுரம் தாண்டவராயதேசிகனுக்குத் தவமணியாகுஞ்சிவலிங்கம்பிள்ளையென்பவர், அவ்வேலைய தேசிகர் சந்ததியாரிடமிருந்த விப்புராணத்தைப் பார்த்து, நெடுங்காலமானதால், ஏடுகளில் பாணம்பட்டுச் சில செய்யுட்கள் சிதைந்தும் சில செய்யுட்கள் முன்பின் விரோதமாயுமிருந்தமை கண்டு புராணஞ்சரிவரமுற்றுமுன்மொழிந்தனர் — முற்றினரேயெனவருந்திப் புராணத்தை வெளிக்குக்கொண்டுவர முயற்சித்துச் சிதைந்த செய்யுள்களை ஆங்காங்கு திருத்திப் பொருத்தியும் * இக்குறியைத் தலையிற்கொண்ட, சில செய்யுட்களை நூதனமாகவமைத்துச் சேர்த்துக் கூடிய திருவிருத்தம், ௯௮௬-ல் முடித்தனர்.

பின்பு ஏற்கனவே இத்தலபுராணத்தில் விருப்பங்கொண்ட இத்தலத்தில் வசிக்கும் மகா-ா-ாஸ்ரீ மகாலிங்கவையர், கோமான் சாம்பசிவபிள்ளை, பொன்னுச்சாமிவன்னியர், உடையார்தெரு நல்லப்பவுடையார், அனுமாநல்லூர் நா. வீராச்சாமிப்பிள்ளை, கவித்தலம் தருமலிங்கசெட்டியார், இவர்கள் முயற்சியால் அச்சிவலிங்கம்பிள்ளை அப்புராணச்சருக்கத்தின் கடையில், அக்கதைகளைப் பொழிப்பாக வுமியற்றப்பட்டு ஸ்ரீவில்வவனேசர் சன்னிதானத்தில் அரங்கேற்றப்பட்டது.

திருச்சிற்றம்பலம்

---

## இவ்வேலையதேசிகராலருளிச்செய்த நூல்கள்.

திருவேரக யமகவந்தாதி.
திருவேரகமாலை.
பழூர்மும்மணிக்கோவை.
அருந்தவநாயகிமாலை.
திருப்பழூர்ப்புராணம்.
திருவைகாவூர்ப்புராணம்.

உ

சிவமயம்.

## கவித்தலம் தமிழ்ப்புலவர் மு. வை. ரா. ரா. ஸ்ரீ ஐயாத்துரையையரவர்களாலியற்றிய

### அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பொற்புரிசைப்பவனமொளிர் திருவைகாவூர்ச் சரிதம்
புனைந்தான் பண்டு,
விற்பனர்சேர் கவித்தலத்தில் வீரசைவ குலத்துதித்த
வேலையன்றான்,
பற்பலவாச்சிதைந்தசெயுட்டிருத்தியுஞ் சிற்செய்யுளையும்
பணித்தானிந்நாட்
கற்பகமாங்காராளர் குலதிலகன் சிவலிங்கக்
கவிஞன் மாதோ.

---

உ

சிவமயம்.

## அறுமாநல்லூர் நா. ரா. ஸ்ரீ வீராச்சாமிப்பிள்ளையவர்கள் இயற்றிய

### அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தெள்ளியவீடருள்வைகாவினின்வாழ் வில்வவனேசன்
சீரைப்பாரி
னெள்ளரியபுகழ்க்கவிவேலையன் முன்னியற்றலதை
யிந்நாள் யாரு
முள்ளமகிழ விராமானுஜபுரந்தாண்டவராய
னுவவின்வந்த
விள்ளுபுகழ்ச்சிவலிங்கப் புலவனணிந்தரங்கேற்றி
மிலைந்தான்மன்னே.

உ

சிவமயம்

# கவித்தலம் கஸ்தூரிசெட்டியார்குமாரரும் இந்நூலரங்கேற்றினவருமாணாக்கருளொருவருமாகிய ௱ ஸ்ரீ இராமசாமிசெட்டியாரவர்கள் இயற்றிய ஆசிரியவிருத்தம்.

செம்மணிகொழிக்குங்காங்கைக்கருங்கடல்
சீரையரையிற் கசைத்துத்
தேயமாமணியணிந்தொளிர் பூமடந்தைக்கு
சித்தகார்ப்புரமெனுங்
கைம்மலையினுரிபோர்த்தகடவுண்மலைவல்லியொடு
கைலைமலைதனினின்றுவை
காவின்வளரொருமுதற்காசைமான்மியமதைக்
கடவுள்பாஷையினிருந்தே
மைம்முகிலளாவுபொழில்சூழ் கவித்தலநகரின்
வாழும்வேலையன்முன்னாள்
வண்டமிழ்ச்செய்யுளாய்த் தந்தனனினிரா
மானுஜபுரத்துவளரும்
பொம்மல்பெறு சிவலிங்கநற்குரவனுய்ந்தே
பொருந்துசிலபாவிணைத்துப்
புலவர்களியெய்தப்புனைந்தரங்கேற்றினன்
பூபுரன்முன்புமாதோ.

---

உ

சிவமயம்

# நக்கன்பாடி வெங்கடாசலபிள்ளை குமாரரும் இந்நூலரங்கேற்றினவரது, மாணாக்கருளொருவருமாகிய மகா -௱-ச- மாணிக்கம்பிள்ளையவர்களியற்றிய

நிலமண்டிலவாசிரியப்பா.

சீருறுங்கமலத்தேர்வளர்பொகுட்டின்
வீற்றிருந்துயிர்களைத்தோற்றல்செய்வேதனுந்

சக்கரப்படைதனைத்தரிக்குங்கரத்தொட்
டக்கரத்தமைந்தவச்சுதப்பிரமனு
மடைவோர்விரும்புமரும்பொருளதனைத்
தடையிலாதளிக்குந்தன்னிகர்கற்பகக்
காவுக்கிறையுங்கடிமலர்த்தாருடைத்
தேவர்கண்முப்பான்மூன்றுகோடித்
திரத்தருமுனிவரெத்திறத்தாரு
மிருக்குமுதலாம்பொருட்கிளர்மறையுங்
காமிகமுதலாங்கோமிலாகமமும்
பன்னூலுருச்சனைபதிதொறும்பயின்று
மிந்நாள்காறுமியற்கையிஃதென்
றுள்ளமதனிலுள்ளிப்பார்க்கி
லெள்ளளவேனுமியையாதென்றுங்
குணமுங்குறியுங்குறிக்கக்குறிபடா
வணமடிநடுமுடிமருவுதலின்றி
ஒப்புமுயர்வுமொருவிவிளங்கிய
செப்பருஞ்சோதிசின்மயவடிவாம்
புண்ணியபூரணபுனிதபுராதன
நிரணயமாகியநிட்களசிவமே
இருவினைப்பற்றியிணையிலாவின்ப
மருவியபேரானந்தவாழ்வை
யருளுதற்காகத்திருவுருக்கொண்டு
சென்னிநாடெனச்செப்புதற்கேய்ந்த
கன்னல்வளனாம்பொன்னிநாட்டிற்
கருணைபெருகியகாவிரிநதியி
னருகோர்குரோசத்*தீசியாசையிற்
றிங்கண்மும்மாரியெங்கும்பொழியவு
மங்குலதிர்தலின்மயிற்குலமாடவுஞ்
செந்நெற்பரப்புங்கன்னற்காடு
மனையிற்பணைமீனறையுமார்ப்பும்

பணையிற்றிகழ் வளைபரந்தெரவிதிரட்டச்
சேயிதழக்கமலத் திருவளர் தவிசிருந்
தேயிளவன்ன மிளைமைப்பெடைக்கை
மணம்புரிந்தின் புடனினைந்தும் வாவியுங்
கந்தமூலாவுநந்தனக் சோலையும்
திருவைகாலூ ரெனுந்திருத்தலத்திற்
பெருகாதரத்தோடொருவா திருந்து
மெய்ப்பிரளயத் தந்தம்பின்றமைமாதும்
பூமிதேவிசெய்பூசையைமகிழ்ந்து
மாமறைவில்வமாய்வனத்திருப்பவ
நமன்விமோசனஞ்சிவனத்தமகிமைய
மமர்புத்திரனுயிரளிக்க துங்கானத்
தறிவில்வேடன்பெற்வீடளித்து
மக்கினிக்குற்றவிக்கினங்களைந்து
நான்முகனியற்றுநதோமிலபூசனையைத்
தான்மகிழ்ந்தவற்குத்தற்பதமளித்து
மரிசெய்பூசனையையகமகிழ்ந்தன்பா
லரீசனெனறவன்பெயரன்புறத்தரித்து
மருமறைக்குரியவநதணன்மகனுக்
கிருவிழியதனையின்புறவளித்து
கில்லாதுநீங்கியசிகாட்டசித்திரைச்
செல்லார்குழலெழுநல்லார்க்கருளிப்
மெல்லாமேவளர்க்கவல்லோளோடும்
பலலார்பணிபப்பண்புடனமருஞ்
சங்கரனீலகண்டன்சதாசிவ
னெனக்குந்தாயுமங்குறைவோன்.
போகியாபரணன் புரமூன்றெரித்தோன்
மீகிளர்வில்வவனேசன்மான்மியத்தைப்
யவனடிதிரத்தர் யாவருங்கூடிப்
புவனமெங்கும்பொலிந்துபரவத்

தமிழிற்கூடியிந்தருகெனக்கேட்க
வமிர்தம்போலுமறைந்தனன்றுன்னுன்
வீரசைவக்குலத்தில்விளங்கும்
சூரியன்போலத்தோன்றும்வேலையு
ணப்பெருமான்மியமாங்கேற்றமற்
செப்பும்வேலையன்சிவகதியடைந்து
நாள்பலவாக நண்ணினவிந்நாள்
கோள்பொருங்கொடிமனை குலவுவைகாவின்
மாமறையாளர்மரபிற்றோன்றித்
தூய்மைஞானம்புகழ்துலங்குகல்வி
மெய்ம்மைபொறையினின் மிக்கமகாலிங்
கையனென்னுமரும் பெயர்ப்புனிதனு
மெண்ணியமூவர்க்கின்புறவளித்துப்
புண்ணியம்பெறும்புகழ்பொன்னுசாமி
வன்னியருந்தெங்கிளநீர்வானளாய்ப்
பொன்னுலகத்திற்பொழியுஞ்செழீஇய
வுடையார்தெருவெனுமொண்புரியதனிற்
கொடையாற்புகழுங்குறையாச்செல்வமு
மில்லறம்புரிதலிலினேயெனச்செனன்
மல்லிப்பெருமைசேர் நல்லப்பவள்ளலுங்
கோமான்புரியிற் குலவியசெல்வப்
பூமான்சாம்பசிவப்புண்ணியனுந்
வான்றோய் பொழிலின்வண்டடைந்துறங்
தேன்றுளிப்பெருக்கார்செந்நெல்வயல்சூ
ழிராமனூர்தகமெனும்பெரும்பதியி
னராமேவுஞ்சடையண்ணலுக்கன்பனாய்
முத்தமிழுணர்ந்து முதுக்குறைவாகித்
தத்துவமுழுதுணர்தாண்டவராயன்
றவத்தவதரித்துத் தமிழ்தேருஞ்
சிவப்பிரகாசனெனுந்தேசிக

ஞான்சிவலிங்கவறிவனையடைந்து
தாங்குறிஇக்கொண்டவைகாத்தல்மான்மியந்
தன்னைப்புதுக்கியாங்கந்தாதிட
நன்மையமொழிகணவின்றிடவாங்கே
எடுத்தசபைனமீடேற்றங்கொள்வதற்
கடுத்துவந்தனவென்றாகத்தினுட்கொண்டே
யன்னகாவளமையாபரும்பெறற்கதைகளு
முன்னவர்சொற்பொருள்பொருந்தமுடித்து
வில்லவனேசர்விளங்குசான்னிதியிற்
கலவிமுற்றுங்கற்றோர்மற்றோர்
யாவருநதேவருஞ்சூழவிருந்து
மாவரங்கேற்றியயங்கினனன்றே.

திருச்சிற்றம்பலம்

---

உ
சிவமயம்.

## சிவலிங்கம்பிள்ளையவர்கள் இந்நூலச்சிட்டவர் பேரிற் செய்த அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

---

குலமபூத்தமணிமாடத்திருவைகாவிளின் மேவுங்
கொன்றைதிங்கள்
சலம்பூத்தவேணியன்மான்மியம்பரவுமசியற்றித்
தநதான்பாசிற
பொலமபூத்தபொழிலணிமானல்லூர்நாச்சியப்பிள்ளை
புரிதவத்தா
னலம்பூத்துவந்தருளுங் கவிவீராச்சாமிவள்ள
னான்குமாதோ.

பாயிரம்முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்

---







உ

சிவமயம்.

# திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்

திருவாய் மலர்ந்தருளிய

திருப்பதிகம்.

---

திருச்சிற்றம்பலம்.

திருவிராகம்—பண்—சாதாரி.

கோழை மிடறாககவி கோளுமிலவாகவிசைகூடும் வ்கையர்,
யேழையடியாரவர்கள் யாவை சொனசொன்மகிழுமீசனிடமாந்,
தாழையிளநீர் முதிய காய்கமுகின் வீழநிறை தாறுசிதறி,
வாழையுதிர் வீழ்கனிகளூறி வயல் சேறு செயும் வைகாவிலே.

அண்டமுறுமேருவரையங்கிகணை நாணரவதாகவெழிலார்,
விண்டவர்தமுப்புர மெரித்த விகிர்தன்னவன் விரும்புமிடமாம்,
புண்டரிகமாமலர்கள் புக்குவிளையாடு வயல்சூழ் தடமெலாம,
வண்டினிசை பாடவழகார் குயின்மிழற்றுபொழில்வைகாவிலே.

ஊனமிலராகியுயர் நற்றவமெய்கற்றவை யுணர்ந்தவடியார்,
ஞானமிகநின்றுதொழ நாளுமருள் செய்ய வலநாதனிடமா,
மானவயல் சூழ்தருமல் சூழியருகே பொழில் கடோறுமழகார்,
வானமதியோடு மழைநீண்முகில்கள் வந்தணவும்வைகாவிலே. ௩.

இன்னவுரு வின்னநிறமென்றறிவதேலரிது நீதிபலவுந்,
தன்னவுருவாமென மிகுத்த தவநீதியொடு தானமர்விட, [வர்,
முன்னைவினைபோம் வகையினான்முழுதுணர்ந்துமுயல்கின்றமுனி
மன்னவிருபோதுமருவித்தொழுது சேரும்வயல்வைகாவிலே. ௪.

வேதமொடு வேள்விபலவாயினமிகுத்து விதியாறுசமய,[னிடமா,
மோதியுமுணர்ந்து முளதேவர்தொழ நின்றருள் செயொருவ
மேதகைய கேதகைகள் புன்னையொடு ஞாழலவை மிக்கவழகால்,
மாதவிமணங்கமழவண்டு பலபாடு பொழில் வைகாவிலே. ௫.

நஞ்சமுதுசெய்தமணிகண்டனமையாளுடைய ஞானமுதல்வன்,
செஞ்சடையிடைப்புனல்கரந்த சிவலோகனமர்கின்றவிடமா,
மஞ்சுடரோடாறு பதமேழினிசையெண்ணரியவண்ணமுளவாய்,
மைஞ்சரொடுமாதர் பலருந்தொழுதுசேரும் வயல்வைகாவிலே.

நாளுமிகு பாடலொடு ஞானமிகு நல்லமலர்வல்லவகையாற்,
றோளினொடுகைகுளிரவே தொழுமவர்க்கருள்செய்சோதியிடமா,
நீளவளர்சோலைதொறுநாளிபலதுன்றுகனிநின்றதிர, வாளைகு
திகொள்ளமதுநாறமலர் விரியும் வயல் வைகாவிலே. ௭.

கையிருபதோடு மெய்கலங்கிட விலங்கலெடுத்த கடியோ,
னையிருசிரங்களை யொருங்குடனெரித்த வழகன்றனிடமாங்,
கையின்மலர்கொண்டு நலகாலையொடு மாலைகருதிப் பலவிதம்,
வையகமெலாமருவிநின்று தொழுதேத்துமெழில்வைகாவிலே ௮.

அந்தமுதலாதிபெருமானமரர்கோனை யயன் மாலுமிவர்க,[மாஞ்,
ளெந்தைபெருமானிறைவனென்றுதொழ நின்றருள் செயீசனிட
சிந்தைசெய்து பாடுமடியார் பொடிமெய் பூசியெழுதொண்டரவர்
வந்துபலசந்தமலர்முந்தியணையும்பதிநல்வைகாவிலே. [கள்,

ஈசனெமையாளுடையவெந்தைபெருமானிறைவனென்றுதனையே,
பேசுதல் செயாவமணர் புத்தரவர் சித்தமணையாவவனிடந்,
தேசமதெலாமருவி நின்று பரவித்திகழ நின்றபுகழோன்,
வாசமலரான பலதூவியணையும் பதிநல் வைகாவிலே. ௰.

முற்றுமமையாளுடைய முக்கண் முதல்வன்திருவைகாவிலதனைச்,
செற்றமலினார் சிரபுரத்தலைவன் ஞானசம்பந்தனுரைசெ,
யுற்ற தமிழ்மாலையீரைந்து மிவைவல்லவருருத்திரரெனப்,
பெற்றபரலோகமிகவாழ்வர் பிரியாரவர் பெரும்புகழொடே. ௰௧

திருச்சிற்றம்பலம்.

——*——

# சருக்க அட்டவணை.

# சோதனைப்பத்திரம்.

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| க | உ | க | வனேசரர் | வனேசர் |
| ஷை | கூ | க | யாகிச் | யாகி |
| ஷை | ஷை | உ | ராங்கி | தாங்கி |
| ஷை | ஷை | ஷை | ஞகித் | ஞகிச் |
| சா | கூ | ச | விருவிசு | விருவிசு |
| எ | கச | உ | னுயிரப் | னுயிர்ப் |
| ஷை | கஅ | ங | புரமபி | புறம்பி |
| அ | உங | ச | வளாக்க | வளர்க்க |
| கூ | ங0 | ங | பளகற | பவமற |
| கக | ரு | உ | ளென்றபொ | ளென்றசொ |
| கஉ | கஉ | க | தாதுனே | தாதனே |
| கஎ | ச | உ | ராத்ன | ராதன |
| கஅ | கஉ | உ | முயவின் | முயவின் |
| உ0 | ரு | உ | அங்கனே | அங்கனே |
| உச | 0 | உ | வாதைதை | வந்தைதை |
| ஷை | ஷை | உச | பாகம் | பாதகம் |
| உஎ | கஅ | ங | ருறைக்க | ருரைக்க |
| ஙசா | ங | ச | தரளை | தாளை |
| ஙஎ | கூ | ங | தருளுவ | தருள்வ |
| ருக | உக | க | எகற்கு | ஏகற்கு |
| ருசா | ருரு | க | பரியன | புரியின |

யச்சமையத்தானபெங்காத வையிடத்துச் செல நக்குமருளிறானைக் [தே
கச்சமையத்தார் புனையுங் கொங்கையுடை வாணியைநங்கருத்துள்வை
ப்பாம். (௧0)

## சத்தகன்னிகள் துதி.

கலித்துறை.

* வீழுமாதவ மறிதிருவேண்டினர் வேட்டுத்
தாழுமாதரார் தென்றிசை மூர்த்தி சன்னிதியி
லாழுமாதரந் தொழுபணிந்தருள் பெற்றுத்தவஞ்செய்
யேழுமாதர்தம் பொற்றிருவடியிறைஞ்சிடுவாம். ... (௧௧)

## திருநந்திதேவர் துதி.

கலிவிருத்தம்.

கந்தருவருஞ் சுரரும் வந்து கழல் தாழுங்
கொந்திலகுபைந்துளவு நந்தனிமுகுந்தன்
வந்திடலும் வெள்ளிமலை வாயிலினிருந்த
நந்தியை மனந்தனி னினைந்து கதிசேர்வாம். ... ... (௧௨)

## நால்வர் துதி.

அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

திருமருவுமணி நன் மகனாந்த மெழிலங்கனையாச்செய்பிரானை
விரிகடலினிடைக்கற்றூண் மிதப்பவிறைபருள் சாரத்து விளங்கினானை
யிருமைபெறுவெங்கரியின் மிசையிவர்ந்து கைலைமலைச்சேர்ந்தானைப்
பரிகொளவந்தரிய திருப்பணிபுரிந்த மந்திரியைப் பரவுவாமே. (௧௩)

## தண்டியடிகள்மற்றைநாயன்மார் துதி.

கலிவிருத்தம்.

தங்குசை வந்தமைதருசேய்ஞலூர்ப்
புங்கவன் றிருத்தாளையும் புந்தியைச்
சங்கரன் பதத்துய்த்தவர் தாளையும்
வங்கமாய்த்துதித் திப்பவ மாற்றுவாம். ... ... (௧௪)

## அவையடக்கம்.

அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

ஓதுமறை நூல்வழியாம் வடமொழிக்கு மடங்கா வுயர்புராணங்
கோதறு தென்புன்றமிழின் மொழிபெயர்க்கு மதுமக்கே ரெய்து மன்னர்யாவும்
பாதியொருமயிர்த்தொளைக்குப் பற்றுத பன்றியுருவெடுத்தமாலைச்
சோதைமடியிருத்தி இருகைகீழான் முழக்கோட்டுள்ளடங்குவதாமே. (௧௫)

### இதுவும்அது. நாலடித்தரவுகொச்சகக்கலிப்பா.

* அன்பினாற் சிலைபோடுமவனை மிக மகிழ்ந்துமிலா
வன்பினான் மலர்போடு மவனைமிகக் கடிந்தபர
னன்பினால் யான் சொலுஞ் சொலாசுறினு மகங்கொள்வா
னன்பினாற்றொழுமுண்டோவன்பதனையடைப்பதற்கே. ... (கசு)

## சிறப்புப்பாயிரம்.

### அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

* தண்ணாருமலர்த்தடஞ் சூழ்திருவைகா மான்மியத்தைத் தமிழிற்கூறி
மண்ணோடும் விண்ணோடும் புகழ்படைத்தான் வீரசைவமரபினுக்குக்
கண்ணாகிப் பெருங்கருணைக் கடலாகி நின்ற சிவப்பிரகாசன்றான்
பண்ணாதபணுந்தவத்தால் வந்தருள் வேலையனெனும்பாவலோனே.(கஎ)

## அரங்கேற்றுங்காலம்.

### எழுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

* கலியுறுசகாப்தமாயிரத் தெண்ணூற்றொருபதினான்கினிற் கதித்துப்
பொலியுநந்தனவாண்டுறுமதிமீனம் புகழ்பெறப் புண்ணியவைகாத்
தலமகான்மியத்தைப் புதுக்கிவில் வேசன் சன்னிதி முன்னரிற்றக்கார்
புலவர்கள் சூழச்சிவலிங்கக்கவிஞன்புனைந்தரங்கேற்றினனன்றே. (கஅ)

கடவுள்வாழ்த்து முற்றிற்று.

---





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவைகாவூர்ப்புராணம்.

## கடவுள்வாழ்த்து.

### விநாயகர் துதி.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சீர்பூத்தவொருமருப்புமிருசெவியும்மதமுஞ்செறிநால்வாயு
மேர்பூத்தவைங்கரமுங்குடவயிறுமுப்புரிநூலிலங்குமார்புந்
தார்பூத்தவம்புயமுமம்புயமுந்திகைக்குமிணைத்தாளுநாளுங்
கார்பூத்தசெந்நிறமுங்கதிக்குமதகயத்தைநிதங்கருத்துள்வைப்பாம். (க)

### வில்வவனேசர் துதி.

மேலாகிக்கீழாகியடிமுடிமால்விதியறியாவிமலனாகிக்
காலாகிக்கனலாகிக்கதிக்குமிருசுடராகிக்கருதுமன்பர்
பாலாகிநீராகிப்பரமாகித்திரமாகிப்படர்ந்தபச்சை
யாலாகிவில்வவனத்தரசாகிநின்றவிறையடியைத்தாழ்வாம் ... (உ)

### சர்வரக்ஷகிதுதி ஷை வேறு

வில்லாவமுத்துறுதலாளைமெய்யினரைகண்ணுதலாளைச்
செல்லாரளகவருங்கொடியைச்செய்யமால்பின்வருங்கொடியை
வல்லார்பொருப்புத்தனத்தாளைவயங்கும்விடைக்கேதனத்தானை
யெல்லாம்வளர்க்கவல்லாளையிதயகமலத்தினில்வைப்பாம். ... (௩)

### சபாநாதர் துதி. ஷை வேறு.

* கன்றுடுங்சொம்பருறுகனிசிதறக்குணிலாகக்கனிந்துவீசி
நின்றுடல்பெறுங்கரியகோவலனுன்முகன்பலநாணேடநின்று
நன்றுடும்பார்தண்மதிநதிமழுமான்புனைந்துநகுவெளியினிற்பொன்
மன்றுடுமாமணியாமொருவனிருவனசபதமனத்துள்வைப்பாம். ...(௪)

உரைகண்ட பல வேதசாத்திர புராண மெனுமுதநி நீரைப்
பரைகண்ட சிவனருளார்ற் கரைகண்டிவ் வுலகினுயிர்ப் பயிர்கட்செல்லா
நிரைகண்ட கொண்டலெனப் பொழிந்து பவவினையகற்று நிமலாவெங்
கரைகண்ட திங்களணியரன் சரிதை தலந்நட முன்னறையுங்காலை. [கட்

எந்தலத் துமுத்த மமாயினை யகன்றதாய்த் தவத்துக்கிடமாயோங்கும்
பத்திதருமாவனமாய்த்தழைத்தோங்கும் வில்வவனப் பதியொன்றுண்
[டென்
றுத்தரமொன் றுணரர்திரக்கதைச் சுதையையருந்தமனதொபபுமெங்கட்
கத்தமொமிவித்தரமாயருளுமெனமுனிவரெலா மறைந்துநின்றார். (௧௫)

## நூற்பெருமை.

அறைந்ததவமிகுமுனிவரகமகிழவில்வ வனத்தரசைப்போற்றிச்
சிறந்த சிவசரிதை தனிலற்புதமா மெஞ்ஞானஞ் சேருஞ்செய்த
மறந்தவிரு மறந்தழைபு மானந்தமாமிம்மை மறுமையெய்தும்
பிறந்துழலும் வினையகலும்படித் தவர்க்குக் கேட்டவர்க்குப் பெருமை
யோங்கும். (௧௬)

பத்திதரும் வித்தையுறு மனத்தினிலே நினைந்ததெலாம் பலிக்குமட்ட
சித்திதரு மிக்கதையை நினைவுபலவின்றியொரு சிந்தையாகிச்
சித்திரத்தினுருவமெனச் சலியாது கேண்மினெனச் சிறந்தசூத
புத்திரர்வித்தது மனதொத்துயருமிக்கதையைப்புகறலுற்றார். ... (௧௭)

## தலமகிமை.

சகல தலமிலிங்கமிவையுண்டாகு முன்னர் புவிதழைத்தேயோங்கி
மிகல் விலகும் வலஞ்சுழிக்குஞ் சுவாமிகிரிக்குங் கூப்பிடிரண்டுக்கப்பான்
மிகுபவன திசையினுயர் புறம்பியர்துக்கருகுதிசைமேல் பாலோங்கித்
தகைமை பெறுமொருகூவற்றலத்தினுயர் வில்வவனந் தழைக்குமாதே.

அந்தமிகு தல முதன் மூன்றினுஞ் சிறந்த பூமிபுரமப்பான் மெய்ப்பா
யிந்து தரணவில்வவனமென்றும் பிரமபுரமென்றுமல்குஞ்
சிந்தைதனின் மகிழ்ந்தவர்க்கு மிகுந்தவர்க்கு மவ்வரனைத் தெரிசித்தோர்
[க்கு
மந்தமறுமறமகலு நகை சித்தியுரம் வளர வளர்வீடெய்தும். (௧௯)

ஓது புண்ணியத்துருவாமேலோருக்கிருப்பிடமாயோங்கியார்க்கும்
போதமருள் வில்வவனப் புடையினமர்பவ ரெல்லாம்புலவராவ
ரேதமணுகாத வெழுமாதரு மன்போடு தவமியற்றியேத்தி
யாதரவைம்புலனடக்கியத்தலத்த மார்ந்தகத்தியானஞ்செய்வார். (௨0)

## தீர்த்தமகிமை

ஆங்கியமகுண்டத்திற் சித்தசுத்தி மருவவதனருகிற் சென்று
பாங்குடனே திண்டினார்கள் படிந்தவர்கள் பவவினையாம் பாசந்தீர்வார்
வேங்கை யதளுடையுடுக்கும் வில்வவனத்திறையருளால் வீடுஞ்சேர்வ
ரோங்குபுகழ்ப்பிரமகுண்டமென்றுளதொன்றது வுமதை யொக்குந்தா
[னே. (உக)

கண்ணுற்றுற் பாவகன்மங்கழன்றுலகமதிற் கனிவாய்க்கருதிச்செய்த
புண்ணியமெலா மடையுமுண்ணுற்றுலளவிறந்த பொருள்களெல்லா
நண்ணுமது தனிலாடவெண்ணுற்றுலின்பெய்து நனையிற் பாகம்
பெண்ணுற்றார் வீடுறுந்திக்குண்டமதன் பெருமையெவர்பேசவல்லார்.

அவ்வுழையிற் செவ்வுழையுமடன் மழுவுங் கடுக்கையு நல்லாத்திந்தா
கௌவுமுதுவெவ்வரவுமிள மதியும் புனைந்த பெருங்கருணைவாரி [ருங்
யௌவியமின் மலரயனே முதலாய யாவர்களுமணைந்து போற்றத்
திவ்வியமாயெவ்வுயிரும் வளர்க்க வல்லாளொடுவாசஞ்செய்யுமாலோய்

## மூர்த்திமகிமை.

### அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

அன்பகன்மனத்தினுலு மாதர வில்லாதானுந்
துன்புறு சோம்பினுனுஞ் சூதுறுகுணத்தினுனுங்
கொன்பரியாயத்தானுங் கூவிள வனத்தின்வாழு
மின்பனை நினைந்தபோதே யெழுபிறப் பல்லனீங்கும். ... (உச)

சேணிடையுறைவரோனுஞ் சிறந்தகூவிள வனத்துத்
தாணுவாலயத்தின் முன்போய்ச் சங்கரற் புகழ்ந்துநோக்கப்
பூணுமன்புடையராகிற் புவிமிசை நூறுசன்மங்
காணியாயமைந்த பாவங்கழிந்து பேரறத்தைச் சார்வார். ... (உரு)

அவ்விடைத் தேவதேவ ரம்மையோடுறைவரொன்றுஞ்
செவ்வினைவரைக்கண்டு சேவிக்குந் தன்மைபெற்றோ
ரௌவியவினையினீங்கி யருங்கதிக் கிறைவராகிச்
செவ்விய சிவலோகத்துச் சேர்ந்து வாழ்ந்திருப்பரென்றும். ... (உசா)

ஆதலாலெம் முயற்சியானு மெவ்வகையினுனும்
வாதனையொழிய வேண்டினு வயின் வணங்கவேண்டும்
போதமுந்தனமும் வாழ்வும் புத்திமுத்திகளுமெய்துங்
காதலினினைந்தவெல்லாங் கையினுமலகமாமே. ... (உஎ)





சிவமயம்.

## இரண்டாவது

# தலமகிமைச்சருக்கம்-நாடுநகர்-

### கலிநிலைத்துறை.

* அணிதரங்கமாப்பரவையையாடையாயணிந்தோர்
பணிமுடித்தலைகிடந்திடும்பார்மகடனக்குக்
கணிவிளங்குசோணாடுகண்ணாகுமக்கண்ணின
மணியெனத்திகழ்ந்துறுவது திருவைகாநகரம். ... ... ...(க)

* தங்குநற்றவத்தவருறுந்தகைமையாற்றுங்குந்
திங்களஞ்சடைச்சிவனுமையொடும்வதிதிரத்தா
லங்கண்மாநிலத்தென்றுமாயாதமர்தலின்றுற்
பொங்குபூங்கைலாயமேபொலிதிருவைகா. ... ... ... (உ)

* மேக்குயேலதாமாமணிப்புரிசையின்மேலுங்
கீழ்க்குக்கீழதாங்கராத்திரிகிடங்கரின்கீழு
மாக்கமார்பினனுந்திமாமலரிருந்தண்ட
மாக்குநாயகனன்றிமற்றியாவர்தாமறிவார். ... ... ... (ங)

* வானளாவியமாடமுங்கொடிகளும்வாசத்
தேனளாவியவாவியுஞ்சோலையுஞ்செறிந்த
தானமாக்கரிபரிநிரைகளுந்தமணியத்தா
லானதேர்களும்பார்ப்பவர்க்கற்புதமாக்கும். ... ... ... (ச)

* அணியுறுநூலினராலயமோரிடையரசர்
மணியிழைத்திடுமாளிகையோரிடைவயங்கும்
வணிகர்மாடங்களோரிடைமேழியர்மலிந்த
பணியின்மிக்கமாமந்திரம்பலபலபல்கும். ... ... ... (ரு)

* தோடலர்ந்தபூச்சுரிகுழற்றுணைவியர்தங்க
ளாடவர்மனம்புறஞ்செலாதைம்புலன்மகிழ
வீட்டும்பலபோகமாம்விருந்தளித்தவரைத்
தேடருந்தெய்வமெனத்தொழுவார்கற்பிற்சிறந்தோர். ... ... ... (சா)

## தலமகிமைச்சருக்கம்

* மஞ்சுகந்த மேனிலையின் மாமதி முகநல்லார்
தஞ்சுகத்தினுக்க முதன மருத்தித்தஞ் சொல்லை
யஞ்சுகத்தினைப் பூவையைப் பயிற்றிட வறைதல்
விஞ்சுகந்தர்வமகளிருங் கேட்டுளம் வியப்பார். ... ... (௭)

* தனங்கடந் தவர்க்காடகப் பொருப்பனதங்க
டனங் கடநதரும் போகமு மதரமுந்தந்து
மனங் கடந்திலார் சாயனன்னடைகண்டமயிலோ
டனங்கடந் திரிந்துழல்வனநாணமுற்றடைந்தே. ... ... (௮)

* அருமறைக்குரியார் செயாகத் தழற்புகையும்
வருவிருந்தினுக்காக்குறுமடைப்பளிப புகையும்
பொருசுரும்படு மிடற்றெருபுகையும் புக்கதுறு
விருவிசும்பிமையார்களுங் கலங்கிடவியையும். ... ... (௯)

* வேதவோதையு பேழிசைவீணையினொலியுங்
கீதநாதமுஞ்சழசுத்தினொலியுங்கிணகிணிக்கான்
மாதராடிடத்தொலியு மாறுவொலிபடைத்த
வோதமாக்கடல் கீழ்ப்பட மேற்படவொலிக்கும். ... ... (௧௦)

* உலகம் யாவையும் வளர்ப்பவளெனவுரைத் தேத்து
மிலகுமெல்லவளைக் கையுடையாளொடுமின்ப
நலம் புரிந்திட வில்வவனே சரநகரி
னலகிலாவிளையாடல் செய்தரசு வீற்றிருப்பார். ... ... (௧௧)

* இத்தகைத்தல வளம் பலவுளசில விசைத்தான்
பித்தனென்றெனைக்கற்றவரிகழ்வர் போறிவி
ளைத்தசேடனு மணிந்துரையானெனினினியவ்
விதநகத்தல சிவ மகிமையுஞ் சிலவிளம்பும். ... ... (௧௨)

---

## நூல்வரலாறு

### அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

சீர்கொண்ட சேத்திரத்து நேத்திரமாலைமிசைத்திற் சிறக்குமெய்யு
நீர்கொண்ட குண்டிகையுந்தண்டகுசைப்பவித்திரமுங்கைந்தகையு
மேர்கொண்டமான்றோலு மரவுரியுமிலங்குதவரெவருங் கூடி
வார்கொண்ட சடிலர்சூழ் வளர்சூதமுனியை மிகவணங்கிச்சொல்வார்.

ஒருபொழுதேனு மன்புடனைத்தொடு வைகாமேய
தருமவெள் விடையினான் றன்சரணங்கள் வணங்கினோர்க்குக்
கரதலத்தமுத மெய்ஞ்ஞானமிய மனைத்துஞ் சேரு
மரவணி சடையத் தேவர்க்காகிய நாமமேழே

* வில்வவனேசர் நல்ல வியாக்கிரவீசர் வேதன்
மல்குறப் பணிந்த வீசர் மைந்தனை யளித்தவீசர்
நல்விழிய ருளுமீசர் நல்லரியீசர் வேடற்
கல்கலின் முத்தியின்பமளித்தருளீசரென்பர்

* இன்னநாமங்களே மூன்றுமுணர்ந்தெழுந்தகாலை
நன்னர் வெண்ணீறு பூசிநாடுகைகுவித்துக்கொண்டு
பன்னரு மன்புவாய்ந்து பவமறத்துதியாநிற்போ
ரென்னரேயாலு மன்னோர் திருங்கதிக்கிறைவராவார்

* மாநிலம்புகழும வில்வ வனத்தமாதமபிரானை
யானலம் பொழியுங் காதைமான்மியம்பகர வேண்டின
மேனலங்கொடுக்குமன்னநாதரேவிளம்பலன்றி
யூனமிலனந்தனாலுமுரைசெயமுறறுங்கொல்லே

* வண்மைசால்தெய்வவில்வவனத்தமர்பெருமான்காதை
யுண்மைசால்சூதமேலோனைமிசத்துவந்துவாழுந்
தண்மைசான்முனிவர்கேட்பத்தழைந்தினிதுரைத்தவாறே
யுண்மைசாலியானுஞ்சொல்வேனியாவருமகிழ்ந்துகேட்ப

மடக்கு கலிவிருத்தம்.

கோவமுனிவுடனேவன்கொலைக்குரியவுடனடுவனை
வாவிமிகத்தோயாரேமடியுமிகததோயாரே
கோவினுயர்மாதூரக்கொம்பருயர்மாதூரக
காவினினித்திருப்பாரேகாயமினித்திருப்பாரே.

கந்தமலர்வுமைபணிவார்கடவுள வில்வவனமபணிவார்
நந்தியடிக்கண்டாரேநடுவனடிக்கண்டாரே
புந்தியெழுமாதரையேபுகழுமெழுமாதரையே
வந்தனைசெய்திருந்தவரேமகத்துவமெய்திருந்தவரே

---

சீர்பெற்ற நெடியகடலைத்தானையாகத்தரிக்கும் பூமகளுக்குநேத்திரம்போலவிளங்கும் அழகிய நைமிசாரணியத்தில் வசிக்கின்ற முனிவர்கள், சிவபெருமான் றிருவருள் வளரப்பெறும் சூதமுனிவரைப்பணிந்து இவ்வுலகுதழைப்பச்சலதிபருகிப்பொழியு மேகம்போலும், மறைக்கடல் பருகிப்பொழியுமலரகிதனே, சந்திரனைச்சடையிற்றரித்த சிவபெருமா

னது திவ்வியசரிதங்களை முன்னம் சொன்னீர், உத்தமமாய்த் தொன்மை
தாய் தவத்துக்கிடமாய் முத்திதருவதாய் விளங்கும் வில்வாரண்யக்ஷேத்
திர மொன்றுண்டென்றுரைத்தீர், அக்கதையினமுதத்தைப் பருகவிரு
ப்புமடியேங்கட்கு விரித்துரைக்கவேண்டுமென்ற முனிவர் களைச்சூரி
க்க ஸ்ரீவில்வவனேசரைத்துதித்து, முனிவர்களே நாம் சொல்லப்புகும்
இச்சிவசரிதையைக் கேட்பவர்கள் பாவந்தீர்ந்து பிறவிக்கடலினின்று
நீங்குவதன்றி இம்மைக்கண் அறம்பொருளின்பமனுபவித்து மறுமைக்க
ண் வீடெய்தல் திண்ணமாதலின் சித்திரம்போலுமசையாது, ஒருநினை
வாகக்கேண்மினென்று புகல்வராயினர். இவ்வுலகிலுள்ள பலதலங்களு
க்குமுற்றோன்றி, வலஞ்சுழிக்குங்குருகிரிக்கும் வடமேற்கில், இரண்டு
குரோசத்திலும், புறம்பயத்துக்கு மேற்கு ஒரு குரோசத்திலு
முள்ளது, வில்வாரண்யக்ஷேத்திரம். அது முச்சிறப்பிலுஞ்சிறந்து
பூமிபுரம், வில்வவனம், பிரமபுரம் திருவைகாவெனப்பெயர்பெ
றும். அத்தலத்தை நினைப்பவர்க்குமிதிப்பவர்க்குந் தெரிசிப்பவர்க்கும்,
முத்திகிடைக்கும். அத்தலப்பக்கத்தமர்பவர், அமரராவர், தங்களுக்கு
ற்ற விடையூறு நீங்கியுங்குருமூர்த்தி சன்னிதியில் சப்தகன்னிகள் மகி
ழ்ந்து இன்னமுந்தவம்புரிகின்றனர். ஆங்குள்ளவியமதீர்த்தம், பிரம
தீர்த்தம், அக்கினிதீர்த்தமென்னும் தீர்த்தங்களைக்கண்டவர், உண்டவர்,
ஆடநினைத்தவர், ஆடினர், அறமுதனான்கையுமடைவார்கள், அவன், அய
ன் மான் முதலியோர்போற்றச்சிவபிரான் சருவ[illegible]யொடெழுந்த
ருளியிருக்கின்றனர். அக்கடவுளை அன்பிலாமலும், ஆசையிலாமலும்
டம்பல் வஞ்சகம் பரியாயமாயாலுங்கண்டமாத்திரத்தில் சகலது
ன்பமுமகலும், ஆரத்தில் வதிபவரும் இக்கவிளவனத்துறுஞ்சங்கரன்
சன்னிதியினின்று புகழநினைக்கின் சதஜென்மத்துள்ள பவங்கழிந்து பு
ண்ணியமடைவர்; இறுதியிலுமழியாத ஆத்தலத்தும்மையோரிறையும்,
அத்தனைக்கண்டு விதிவழாது சேவிப்பவர் வினையினீங்கிச்சிவலோகமடை
வர், ஆதலால் சென்மவிடாய்தீர வெண்ணிவணங்கினர்க்கு, ஞானம்,
தனம், வாழ்வு, புத்தி முத்திகளும், இன்னம் நினைத்ததும், கரதலாம
லகம்போல்கைகூடும். அன்போடு, ஒருபொழுதாகிலு வைகாவின் மே
யபுண்ணியவிடையினார் சரணத்தைப்பணிந்தவர், கைக்குமுதமெய்திக்
காமியமனைத்தும் பெறுவர். இக்கடவுளினது திவ்வியநாமமேழையுக்கு
மினிங்கிய காலையில் திருவெண்ணீறணிந்து கைகுவித்து, அன்புடன்றுதி
ப்பவர் யாவராயினுங்[illegible]மெனச் சூதபுராணிகர் சொ
ல்லியருளினர்.

தலமகிமைச்சருக்கம் முற்றிற்று.

ஆ. சருக்கம் உ௰. திருவிருத்தம் ௱௨.

சிவமயம்.

# கைலாயநாதர் வரவும் பூமிபுரமென்னும்பெயர் வரவும் உரைத்தசருக்கம்.

கலித்துறை.

பதிகம்.

வன்னிகுண்டத்தினுதித்துயர்மகத்துவதலத்தோட்
நன்னர்மேவியகூவிளவனத்தமர்நாதன்
பன்னரும்புகழ்க்கதைச்சுதையறமெலாம்பருகி
யின்னறீர்தரத்தெரித்தியென்றருந்தவரிசைப்பார். ... ... (௧)

* வெள்ளிமால்வரையினிதுவீற்றிருப்பவர்வரவும்
வள்ளிதாகியபூபுரப்பெயர்வந்தவாறுங்
கள்ளுலாமலர்வில்வக்கானப்பெயர்க்கலப்பு
மெள்ளருந்திறற்கூற்றுவன்கருவந்தீரியல்பும், ... ... (௨)

* நடுவனூர்விமோசனமுமந்நடுவனூர்தீர்த்தங்
கடுவிராங்களத்தெம்பிரான்களிசிறப்பெருமை
யடுதிறற்றவாவக்கினித்தீர்த்தம்வந்ததுவும்
விடுதன்மேவுருவிதிபுரமாகியவியல்பும். ... ... ... (௩)

* வரியிறைச்சுரும்புளர்த்தருதிருத்துழாய்வனையு
மரிசெய்பூசனைதனைமகிழ்ந்தவன்பெயரடைந்த
பரிசுமுப்புரிநூலணிவிப்பிரன்பயந்த
வொருசுதற்கிருவிழியொளிபெறவுதவியதும். ... ... (௪)

* ஏழுமாதர்தம்வரவுமேழ்நாமத்தினியல்புஞ்
சூழுயிர்ப்பெலாம்வளர்ப்பவளென்றசொல்லுமைக்கு
வாழுநாமமொன்றுற்றதுமற்றதும்விரித்துத்
தாழுமாதரத்துறையெனச்சுதனுஞ்சாற்றும். ... ... ...(௫)

மன்றுளாடியசங்கரனுயிடைவரவு
நன்றுநன்றுபேரறிவுடைநற்றவர்கேண்மின்
முன்றயாவொடோர்கற்பத்தின்மறையெலாமுழங்க
வொன்றுமால்விடையூர்ந்துமெய்ப்பரையுடன்கூடி. ... ... (௬)

வெள்ளியங்கிரியுறையிறையாகியவிமல
னெள்ளரும்பெரிதாயவோரின்விளையாட்டால்
வள்ளலங்கமர்கணத்தொடுமெழுந்துவான்வாழ்த்தக்
கள்ளுலாமலர்க்கால்பொழின்முனிவராச்சிரமம். ... ... (எ)

கோடுமல்கியபுண்ணியவுரைகளுங்குளிர்நீ
ரோடுமோடையுங்கண்டுமகிழ்ச்சிமீதூரப்
பாடுசேர்கடற்பாரிடையுற்றனன்பலவாங்
காடுங்கற்பகநாடுநேர்நகரமுங்கடந்து. ... ... ... (அ)

சையமால்வரைத்தடத்தினினுறைகுறுமுனிவன்
கையபாத்திரநீர்விரைந்திழிந்துபார்காந்து
வெய்யவேட்டுவருறைந்திடுகுறிஞ்சியைவிரும்பி
மையிலாரமுமாரமுந்திரைக்கரம்வாரி. ... ... ... (கூ)

பாலைமாநிலமறவரும்பணிந்திடவிரைந்து
கோலமுல்லையிற்சென்றுபல்குருந்தினைத்தாக்கி
நீலமாமலர்மருதநன்னிலத்தினிற்பரந்து
வேலைசூழ்ந்திடுநெய்தலைவிரைவொடுநாடி. ... ... ... (க0)

பூத்ததாமரைகுவளைகல்லாரமும்பொலிந்தே
யார்த்தசாரசங்காரண்டமன்னமுஞ்சிறந்து
தூய்த்ததாய்மலரளைந்தினவண்டுகொணித்து
வாய்த்தகீதளமருதச்சிறகாலுறவயங்கி ... ... ... (கக)

கலிவிருத்தம்.

தாவுதாதகிதா[தவளை]மாதலை
மேவுபாதிரிவில்வமிலாங்கலி
கூவுகோகிலங்கோதிளமாந்தருக்
காவஞ்சேர்ந்துகதித்தெழின்மன்னியே. ... ... ... (கஉ)

கண்டகாவையகங்கள்குலையவு
மண்டில்வெண்டுமருத்தம்பலிக்கவு
முண்டவர்க்குமெய்ஞ்ஞானமுறைக்கவும்
விண்டுதோய்த்தவர்வீடடைச்செல்கவும். ... ... ... (கங)

பாங்குடன்வளப்பத்தருகாவிரிப்
பாங்கரெய்திப்பரையுடன்பொங்கமா
மாங்கனுள்ளவதிசயங்கண்டிறை
யோங்குமின்பொடொருந்தரஞ்சொல்லவார் .... ... ...(கச)

கோடிலாவியகுன்றனிகன்னியே
யோடுகாவிரியோங்கும்வளத்திரு
னீடுகாலமுநின்றிடுமோர்தலந்
தேடியிங்குவசிக்கவியைந்தனம். ... ... ... ... (௧௫)

இயைந்தகாரணமியாதெனிலன்பர்நம்
முயர்ந்தவாவெள்ளியோங்கலினெய்துதற்
கயர்ந்ததன்மையராகுதலாலவர்
நயந்துபூசித்துநற்கதிசேரவே. ... ... ... ... (௧௬)

விரிகொண்மேதினிமேவியமானிடர்
பரிசிறந்திரிபக்கிவிலங்குக
ளரிபெருநம்மடியைவணங்கியே
தரிசனஞ்செய்துசன்மமொழிக்கவே. ... ... ... (௧௭)

என்றுமங்கையோடின்புறுகாவிரிக்
கொன்றிரண்டுகுரோசத்துக்குத்தரந்
துன்றுதிப்பியசுத்தந்தருந்தலத்
தன்றிலிங்கமதாகவமர்ந்தனர். ... ... ... ... (௧௮)

உறைந்துகாந்தையோடுண்மகிழண்ணலைச்
சிறந்தகாந்திசெழிக்குமைக்கண்டனை
நிறைந்தபார்மகள்கண்டதிநேயமா
யுறைந்ததெய்வவுருவமதாகியே ... ... ... ... (௧௯)

துய்யவெள்ளிச்சுடர்க்கிரிவாசரா
மையர்நம்மிசையம்மையோடெய்திறைச்
செய்யும்புண்ணியசித்திபலித்தியா
முய்யவந்தனரென்றகமுன்னியே. ... ... ... ... (௨௦)

மன்னுமானந்தவாரியின்மூழ்கிச்செம்
பொன்னினனமை பொற்புக்கடத்திறைப்
பொன்னிநீர்கொடுபூதகணத்தரைக்
கன்னியோடிங்கனித்துநீராட்டியே. ... ... ... (௨௧)

## அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பீதாம்பரத்தினனுமொளிபெருகுமணிநற்பணியானுஞ்
சீதாதிகச்சந்தனத்தானுஞ்சிறந்தநிறத்தச்சுதத்தானும்
போதாலிசைந்தசரத்தானும்புனைமாலதிசண்பகத்தானுந்
தாதார்துளவுசாதிவனசங்கலாரமலரானும். ... ... ... (௨௨)

சொன்னத்தமைத்தமலரானுந்துளவும்வில்வக்கிளையானு
மன்னிவளருங்குருந்தானுமருமந்தாரமலரானுந்
துன்னிய நவமணியானுந்தூபதீபவகையானு
நன்னர் நைவேதனத்தானு நறைகொண்டினிக்குங்கனியானும். (உ௩)

பூகநாகவலியானும் புகழுநீராஞ்சனத்தானும்
வாகுபெறுமந்திரமுறையாய் வழுத்திச்செலுத்துமலரானு
மேகத்தசனிக்குரனிகர்த்தவிதத்தொனிவாத்தியத்தானும்
வாகுக்கவரிக்கொடையானுமயிலினிறைவிசிறியானும். ... (உ௪)

நிருத்தகீதமுறையானுநிமலர்விமலத்திருப்பதத்திற்
கருத்தைச்செலுத்தியுபசரித்துக்கனிந்துபூசைதனையியற்றி
யுருக்கமுடனேவலஞ்சூழ்ந்துரோமஞ்சிலிர்ப்பப்படிந்தெழுந்து
கரத்தைப்புடைத்தாடோடிக்கண்ணீரரும்பத்துதிதொடங்கும். (உ௫)

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தேவதேவநாதவன்பர்சோரவாரம்வைத்தவா
தேவிநாயகாவிளங்குதிங்கடங்குவேணியா
மூவருருவமூவருக்குமுதன்மையாஞ்சதாசிவா
வாவலோடிமாதிநூலறிந்துரைக்குமையனே. ... ... (உ௬)

அத்தநித்தவிச்சுவம்புரக்குமையதேசிகா
வுத்தமத்தவத்தனென்னவுருவெடுத்தசாந்தனே
சுத்தமுக்குணங்கடந்தசோதியேயநாதியே
மொய்த்தமாயையைக்கடிந்தமொய்ம்புலாவுசம்புவே. ... (உ௭)

காயம்வாய்மனத்திறனுங்காணுதற்குருதவா
மாயனார்ச்சனைக்கியைந்தமங்களப்பதத்தனே
தூயதாபரங்குணந்தொடர்ச்சியொன்றுமின்றியு
மோயுமண்பரைப்புரக்கவுருவெடுக்குமொருவனே. ... ... (உ௮)

கைலைவெள்ளிமலையிருந்துகாசினிக்குள்வந்தநின்
செயலினுன்மனத்தினிட்டசித்தியும்பலித்தனன்
னயமிகுந்துசெய்தல்செய்தநன்மையுங்களித்தறன்
மயமிகுந்தநின்பதம்வணங்கியன்புசெய்தலால். ... ... (உ௯)

போற்றிபோற்றியென்றுரைத்தபூமகட்கிரங்கியே
யேற்றினூர்தியுண்மகிழ்ந்தெழுந்துவந்துமுன்புநின்
முற்றுபூசைசெய்தவுன்றனூர்வமென்னவென்னலு
நீற்றுவாநின்பாதமன்றிநினைதல்யாதெனச்சொல்வாள் (௩௰)

இத்தலத்தையாவரேனுமின்புறத்துதித்தபேர்க்
கத்தம்வித்தைபுத்திமுத்தியருள்வதேயென்னூர்வமென்
றத்தரம்புகன்றபூமியுண்மைகண்டுகல்லதென்
றத்தரக்கணத்திலிங்கமாகிமெய்மறைந்தனர். ... ... (௩௧)

மறைந்தபின்புபூமிதேவிமத்தகக்கணத்தனை
நிறைந்தவன்பினுன்வணங்கிநித்தருக்குவப்பதாய்
மறந்தவிர்ந்தவிச்சுவக்கன்மாவையங்கழைத்துயின்
சிறந்திலங்குமணியினுனுஞ்செம்பொனுனுஞ்செழிக்கவே. ... (௩௨)

சிகரமண்டபந்தளஞ்சிறந்திலங்குகோபுர
மிதலந்தொடர்ந்துயர்ந்தமதில்களேழுசுற்றினுந்
திசமுமாவரணவிலேகர்செழிக்குமாலயங்களு
மிமைமேடையொடுகருத்தன்மகிழவாலயஞ்செய்தார். ... (௩௩)

தனுபோர்தலத்தினுக்கியைத்துவைத்தரன்றனை
மனதுகந்துபூசைசெய்துமகிழினங்கிருந்தனள்
வனசமொத்தவதனியவனிமகள்வகுத்ததாகையாற
புனிதமிக்கமேவுபூமிபுரமெனச்சிறந்ததே. ... ... (௩௪)

புகழ்விளங்கியுரையோடெய்திபுகைபரந்தபூபுரத்
தகமகிழ்ந்தோர்கணமறைக்கணந்தரித்தமானிடர்க்
ககமிகுந்தபிரமகத்தியாதிபாதகங்கண்மின்
னிகள்சிறந்தவிரவிகண்டவிருளெனப்பறக்குமே. ... (௩௫)

பூதராதர்வரவுமாதிபூபுரத்தின்வரவும்யா
மோதினம்புவித்தலத்தருய்யவென்றிரங்கியே
கோதில்வில்வவனமும்வந்தகொள்கைகேண்மினென்றுபி
ஞதிநூலையோதுசூதரந்தணர்க்குரைப்பரால். ... (௩௬)

---

உலகமுய்யுமயாகத்திற்றோன்றிய சூதபுராணிகரே நன்மையய க்கும் வில்வவனத்தெழுந்தருளிய கண்ணுதற்கடவுள் கதாமிர்தத்தையெ ல்லாம் அடியேம்பருகப்புகட்டி யெமதின்னல்களைக்களைந்தருளவேண்டு மெனவருந்தவருரைக்கச் சூதர்புகல்கின்றனர். நீவிர் கேட்டது சாலவு நன்மைதரத்தக்கதாதலின், முதலில் அரன்வரவுரைக்கின்றனம் அன்புட ன் கேட்பீராக, முன்னோர் கற்பத்தில் கைலைப்பிரானோர்விளையாட்டாக உமாதேவியொடு விடையூர்ந்து பூதஞ்சூழ வேதம்போற்றப் பொன்னுல கேற்றத்தென்றிசைநோக்கிப் புண்ணியநதிமலைநாடுநகரங்கடந்துகுறுமு னிவன்கையினெடுங்கிச்சையையினின்றிழிந்து ஐந்திணையினும்விரிந்து கா வும்பூவும்பலபக்ஷிகளும் பொலிந்து கண்டவுடன் சகலபாவமு மிரியச்

செய்து கதியளிக்குங் காவிரிநதியைக்கண்டு களித்து இமையமின்ற உமையவளே இக்காவிரியின் வளப்பத்தாலிங்குவசித்தருளவேண்டும். ஏனெனின், உலகுளோர்நம் கைலையையடைந்து தரிசிப்பதரிதாதலின், மால்கராணுமலரடிதரிசித்து, முத்தியடையும்பொருட்டேயென்று, அம்பிகையுடன் காவிரிவடாதுபாங்கர் மூன்றுகுரோசத்திலோர் திவ்வியஸ்தலத்தில் இலிங்கவுருவமாகவெழுந்தருளிய அண்ணலையுமாதாவையும் பூமகள்கண்டு தேவுருக்கொண்டு வெள்ளிமால்வரை வீற்றிருக்கும்பெருமான் நம்மிடம்வசிக்கவென்னபுண்ணியஞ்செய்தன மென்றுன்னித்துப் பொன்னினமைந்த குண்டிகையிற்பொன்னி நீரெடுத்துவந்து அவ்விறைவனுடிறைவிக்குமபிடேகஞ்செய்து திவ்வியமலராலருச்சித்துச்சோடசோபசாரம் நைவேத்தியம் பலம் தாம்பூலம் விதிமுறையளித்துப் பஞ்சவாத்தியமுழங்கத் தீபாராதனஞ்செய்து வலம்வந்து அஷ்டாங்க பஞ்சாங்கமாகப்பணிந்து கைகொட்டி நடமாடி ஆனந்தக்கண்ணீரரும்ப அங்கம்புளகித்து, முன்புநின்று சிவபெருமானது, திவ்வியநாமங்களாற் றோத்திரஞ்செய்து நின்றனள். சங்கரன் அப்பூமகளன்புக்கிரங்கி முன்புதோன்றி உனக்குவேண்டும் வரமியாதெனெ வப்பூமகள் எனதிறைவ நின்பத மலரை நினைதலன்றியாதுவேண்டும், ஆயினுமித்திவ்வியதலத்தை யன்புடன்றுதிப்பவர்க் கிம்மைமறுமைப்பயனையளிப்பதேயென்று கேட்டபடிகொடுத்து இலிங்கத்தில் மறைந்தருளினர். பின்பு அரனைவணங்கி விச்சுவக்கன்மாவையழைத்து மணியினும் பொன்னினும் சிகரகோபுரமதில் மண்டபம் தளம் ஆலயமுதலியவைகளை அமையச்செய்வித்து தனது பேரத்தலத்துக்கிசைத்துச்சிவபெருமானைப் பூசித்துக்கொண்டிருக்கின்றனளாதலாற் பூபுரமெனப்பெயர்பொலியுமததலத்து அரைக்கணமேனுந்தரித்த மானிடர் பாவம் இரவிகண்டபனியெனப்பறந்து அவர்கள் பேரின்பத்தைப்பெறுவார்கள்.

கைலாயநாதர்வரவும் பூமிபுரமென்னும்பெயர் வரவு முரைத்த
சருக்கம் முற்றிற்று.

---

ஆ சருக்கம் ௩ - இ திருவிருத்தம் அஅ.

---





சிவமயம்.

# நான்காவது வில்வவனமென்னும்பெயர்வரவுச் சருக்கம்.

### அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மேலொருகாலகற்பாந்தமதனின்மறைவேதமனைத்தும்வெருண்
டேலயமாதவமென்றுநடுங்கியிரங்கியிலங்கொளிசேர்
நீலநிலாவைடூரியமரகதநித்திலமுதன்மணியு
மோலமோடரிதுறைமலர்களுமுளரிகளுறைதிறைமோடைகளும். (௧)

வரையும்விசித்திரசித்திரபந்தியும்வாய்ந்தரிபிரமன்முதற்
சுரர்முனிவரர்கந்தருவரியக்கரசுரர்கின்னரர்சித்த
ருரைதுதியுஞ்சிந்தாமணிமயமெனவோங்கியநெடுமனையு
மருவியகைலையடைந்தங்கெழிலுறுமணிதிகழுஞ்சிகரம். ... (௨)

புனைமதில்புடைவளையாலயமிடைமணிபொலிதிகழ்சிகரமிசை
வனமிசைவிரனவசத்திகள்சுத்திவளைந்திடவார்சங்கந்
தொனிதுந்துமிபேரிகைபூரிகைபலதூரியமிசைமுரலக்
* கனசாரக்குக்குலுமணமெங்குங்கமழ்தரவளமையுடன். ... (௩)

அலைபயில்வரநதிதனினனைசடைமுடிதனையிளமதியொளியும்
விலையுயரரதனமிளிரொளிபழகியவியனுறுபுனைகலனுங்
கலைமதியரியெரிபயில்விழியணிபவர்பயம்விலகியகரமு
நலமகிழ்தருமகிமையுமுளவிறைவனைநனிர்மலைமகளுடனே. ... (௪)

கண்டுவணங்கி வினையமொடு சிந்தை களிந்தெட்டவயவமு
மண்டல முறமெய் படிந்துவகையின் மொழிமாற வெழுந்துருவங்
கொண்டமரர்க்கு முனிதியதாய் வருகுருபரமகதேவா
வண்டர்குழாமர்ச்சனை செய்யற் புதவவயவதரநாதா. ... (௫)

தினையாள் சங்கரவயனரியுருத்திரனெனவுருவெடுத்தே
யானசராசரம்யாவும் படைத்தளித்தழிக்கும் விச்சுவவதிகா
ஞானமுதவுகுருதாயருள் தந்தைவிறைவசகாவாகி
மானிலமுழுதுந்தன் மயமன்றி மறுத்தொரு மயமில்லோய். (௬)

நின்றுடைநெட்டுயிர்தன்னில் விளைந்துறை நிறைமறையாமசரு
னின்னருள்பெருகியமைந்தர்களொன்று நினைந்துபுரப்பவனீ
மன்னியவுன்னதுபாலனத்தால் யாம்வளர்பவர்மகதேவா
முன்னிய கர்ப்பமுடிவின் மடிவன்னி முயன்றுனையுற்றனமே. ... (௭)

* கனசாரம்—கருப்பூரம்.

கரலனென்றருள் காலாசுகமருள் கர்த்த*விகுதி நயனு
ருலதராபணியன் பர்கள் கனகனாதுங்காமகலிங்கா
வேலையிருனெழுபயமுறுமெம்மைவிடாது புரந்தருளென்
றேலமிஞ்சதுமறைதிரமுறவருளோங்கியசங்கரரும். ... (அ)

மடிகுவமெனநனி பயமுறுமறைமனமகிழவழுத்துவர்நீர்
முடிவுகமுன்னிவெருண்டிடலொழிகமொழிந்திடும்வகைகேண்மின்
படவியின்வரமருள்காவிரியெனவொருபுகழ்நதியுளதந்நீர்
படரொளிபயில்சரமசரமும் வினைவிளைபற்றறுவீடெய்தும். ... (கூ)

அத்திரந்துக்குந்தர திசைதனினையுறு*புகையளவை
வித்தாரப்பூபுரமுண்டதிசயம் விண்டவர்கண்டவர்கால்
வைத்தனருன்னினர்காமியமுறநிருவாணமெய்துவர் கைலை
யித்தாரணிமுழுதழியினுமழியாதெம்மது கருணையினுல். ... (௧0)

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அந்நலத்தினினட்புவைத்தவரகம்விலங்கவிலிங்கமாய்
மைந்தடக்கணிசத்தியாவும்வளர்க்கவல்லவருடனியா
மெத்தினத்தினுமெத்தநத்தியிருப்பமற்புதமாகையா
னத்துமச்சம்விடுத்தடைந்தெமையன்போடாகமவிதியினுல். ... (கக)

மிக்கபூசைபுரிந்துகூவிளவிடபியுருவமெடுத்துநீர்
முக்கியத்தவமுயலின்யாவு முடிந்து முடிவிலர் நீவிரென்
றக்கினிக்கணர் சொல்லவாரணம் யாவு மகமகிழ் வாகியே
யக்கணம் புவிசென்றுசையையகத்தினூற்பவ மாகியே. ... (கஉ)

நின்மலப் புனலாகி நன்மை நிறைந்து தூய்மை சிறந்துமா
கன்மடத்திரளாமகங்கள் கடிந்தகாவிரிகண்டுகந்
தின்மனத்தொடுமூழ்கிவானவரெழிலுருக்கொடுவடதிசைப்
பொன்மதிற் புனையாலயம் பொலிபூபுரத்தினை நாடியே. ... (கங)

வந்துகண்டு வணங்கியாவும் வளர்க்க வல்லவள் பாகர்பாற்
சிந்தையன் பொடுசென்றடிக்கடிதரிசனஞ்செய்திறைஞ்சியே
விந்தைகண்டு வியந்து காவிரிமென் புனற்கொடுவந்துவந்
தந்திவண்ணரையம்மையொடு மூழுக்காட்டிவாத்தியமதிரவே. ...(கச)

துய்யமருமலர் சந்தனம் பணிதுயிறரித்துபசாரமாய்
வெய்யகனலுறைதூபதீபநைவேத்தியங்கனிபாகிலை
செய்யசிநீராஞ்சனத்தொடுசித்தமகிழ்ந்தருச்சித்தபின்
கையெடுத்துநடித்துகந்து கனிந்துகோயில் வலஞ்செய்தே ... (கரு)

---

* விகுதி—வேறுபாடு.

* புகை—யோசனைதூரம்.

ஈசர்தன் புறம்பூசைசெய்து பேரின்பவாரியின்மூழ்கியே
யாசிலிறையருளாலிரும்பயமன்றியவ்வுழைவில்வமாய்
வாசஞ்செய்து தவம்புரிந்த வவ்வகையினாலத்தலத்தினை
வீசுபுகழ்பெறுவில்வவனமெனமேதினிக்குள் விளம்புவார். ... (௧௬)

அந்தவனத்திலிருந்ததால் வில்வாடவீசரெனப் பெயர்
வந்தவகையிவிலம்பகந்தனை வழுத்து மவர் கேட்டவர்கள்பு
வந்தொலைந்துபலன் சிறந்*தபவர்க்கமும் பெறுவார்கள்பதி
சந்தவிர்க்கு மறந்தழைத்து சுகந்தரும் புனிதந்தரும். ... (௧௭)

இக்கதைச்சுதை சூதமுனிவரியம்பவிண்டனனகரினுஞ்
சக்குமணியணியிறைவரணிவில்வாரணியமெனவந்தது
மிக்கனைப்பொடித்தாற்குவில்வவனேசரென்பெயர்வந்ததுந்
தக்கதெனவானந்த மாகியதவர்க்குச்சூதருரைப்பரால். ... (௧௮)

* அபவர்க்கம்—முத்தி.

---

உலகிற்சிறந்த நைமிசவனத்துறையுந்தவசிரேட்டரே. ஆதிமத்தியாந்தரகிதனாகவிளங்குகின்ற பூதநாதனது வரவும், பூபுரமென்னும் பெயர் வரவுமோதினம், இனி வில்வவனமெனப்பெயர் வரவுரைக்கின்றனம் கேண்மின், முன்னம், ஓர் கற்பாந்தத்தில் வேதங்கள்முற்றும்பயந்து இக்கற்பத்திற்றில் நாமும் லயமாகி விடுவமேயென்று நடுக்குற்றுத் திருக்கைலாயத்தையடைந்து, சிவபெருமானையுமுமையவளையுங் கண்டு பணிந்து மனங்கனிந்து ஹே: சங்கர, நினதுயிர்ப்பில் வந்த புத்திரனாகிய வெம்மைப்புரந்தருளாவிடின் இக்கற்பத்திற்றில், மடிதலடைவோமென, அக்கருணைப்பிரான் மகிழ்ந்து பூவுலகில் நினைத்ததை முற்றுந்தரும். பொன்னிநதிக்குத்தரம், அரைப்புலையளவில், உலகமழியினுமழியாதோங்கும் பூபுரமென்னுந்தலத்திற் சென்று, எம்மைப்பூசித்துக்கூவிளவுருவங்கொண்டுதவமுயல்விராயின், யாவுமொழிந்தும், நீவிரொழிவீராவிரென்றாக்கணனுரைப்ப, ஆரணமிபாவுந்தாரணிசென்று பவம்போக்கும்பொன்னிநதியைக்கண்டின்புற்று ஸ்நானஞ்செய்து, கடவுளருருக்கொடுதிருமஞ்சனந்தாங்கிப்பொன்னிலனைமைந்த, ஆலயம்பொலியும் பூபுரத்திற்குவந்து சர்வரட்சகிபாகனை வாத்தியம் நாதிக்க, அபிடேகஞ்செய்து, பொற்றுகில் சந்தனம் மலர்களால் அலங்காரஞ்செய்து அருச்சித்து நைவேத்தியதூபதீபசோடசோபசாரமுஞ்செய்து வலம்வந்து பேரானந்தத்துமூழ்கிச் சிவபிரான் பக்கத்து வில்வவுருக்கொண்டு தவம்புரிந்து அங்ஙனச்சந்தகர்ந்து நின்றனவாதலின், இந்தத்தலத்துக்கு வில்வவனமென்னும் பெயரும், இதிலெழுந்தருளியபிரானுக்கு, வில்வாடவீசரென்றபெயரும், வந்ததனவென்று சொல்லிப்பின்னுஞ் சூதபுராணிகர் சொல்லுகின்றனர்.

வில்வவனமென்னும் பெயர்வரவுச்சருக்கம் முற்றிற்று.

ஆக சருக்கம் ௩க்கு திருவிருத்தம் [illegible].





சிவமயம்.

# ஐந்தாவது இயமன் கர்வபங்கச் சருக்கம்.

இன்னுமொருகாதையுண்டதுபுகலுவம் வியாக்கிரனுதலொன்னுமேது
பன்னுமலர்விண்டவர்களிகபரம்பெறுவர்முன்பாஞ்சாலதேயமதனிற்
றன்னுகுசநாபமெனுநன்னகரினுண்மறைச்சுருதிசாத்திரமனைத்து
நின்னயமதானபொருள்கண்டுகரைகண்டதவநிதியென்னும் வன்னியொ
ருவன். (க)

இளமைதனில்இல்வாழ்க்கையைத்துறந்தகமகிழ்ந்தின்புறுமனத்தனாகி
வளமைபெறுநதிகள்பலமுழ்கவுமகத்துவவனத்திற்றவஞ்செய்கவு
முளமதினினைந்துசென்றங்கங்குதீர்த்தநதியுயர்தவவனந்தலங்க
ளநேகமெலாந்தேடிவருகாலைவளமிகுபொன்னியுற்றதீரத்தணைந்தே. (உ)

புண்ணியசொரூபமாய்நின்மலம்பொலிசலிலபூரிதமதாய்ச்சிறந்து
தண்ணளிமிளிர்ந்தகல்லோலமாமுசலினமைந்து*காதம்பமாட
விண்ணுயருமிருநறுமரங்களைக்காலுதறிவிசிறுதிவலைகணனைப்ப
வண்ணவரிகோதுகனிவழிநறையின்மகிழ்ந்தளையமருவுமிருகரைநிறைந்தே.

வளர்பலாக்கதலிமாநாளிகேரங்கள்பலமன்னவெகுநன்மைதழைய
விளமைபெறுமெழிலுலோயாமுத்திராங்கிசமுமிசையவாவிந்தவதன
மனிகுழற்செந்தாமரைப்போதுகரமீனமக்கி*சக்கிரவீக்குய
மொளிர்பவளவதரத்ரந்ர்த்திவலையெயிறுநுரை யொண்ணகையுறுப்ப
டக்கி. (ச)

அங்கிரபாகந்துயிற்புட்குரற்றெனிகளறைவசனமாய்விளங்கு
அங்கண்ணுயுருக்கொண்டுலோகபாவனி யென்னவமர்பொன்னிதன்னைநோக்
சங்கையகறனியன்*கிருதகிருத்தியநமதுசனனபரிசுத்தமென்றே [கிச்
மங்களப்பெருகுமந்நீராடிவெள்ளைமடிமணியக்குநீறணிந்தே. (ரு)

கிருத்தியகிருத்தியமுடித்துவடபாலினுயர்நெடுமதிற்புடைபராவச்
சித்திரமிரத்தினமிழைத்திலகுசிகரஞ்சிறந்தவில்வாரணியமு
மொய்த்துவளர்மேதினிபுரத்தினைக்கண்டுகமோகமாயங்குசென்றே
யத்தலத்தெல்லாம்வளர்க்கவல்லவெண்மருவுமண்ணண்மந்திரமடைந்தே.

பொங்கமிகுமுவகைமீக்கொண்டுகனியன்புநிறைபூரணமனத்தனாகி
யங்குமகலிங்கவுருவானவில்வவனேசரடியிணைவணங்கியேத்தித்
துங்கமிகுதவமியற்றுந்தலமிதென்றுபரிசுத்தவில்வாடவியினிற்
றங்கியாசனமிசையிருந்திறையையுன்னிநற்றவமொத்திருந்தகாலை. (எ)

---

* காதம்பம்-பாடும் அன்னம்.
* சக்கிரவீ-சக்கரவாகப்புள்
* கிருதகிருத்தியம்-நித்தியகன்மம்.

து முன் வாரலொழியென்று மறைந்தருளினன், இமையவருந்தமது புரஞ்சென்றனர். பிரமன்றன்புற்று மனைவியிடம் நடந்ததைக்கூறிய நாயகனைத் தேற்றுவித்துக் கைலையிற்சென்று பார்ப்பதிமணாளனைப்பணி ந்துதுதித்து, எனது கணவன் தெரியாதிழைத்த தீங்கைப்பொறுத்து முன்னம் போலாகவருள் செய்யென்னுங் கலைமகளை, அருட்கடல் நோக்கித் தென்பாரிற் பொலியுங் காவிரி நதி வடபாங்குள்ள, நமக்குப்பிரியமான வில்வவன மென்னுந்தலத்திற்கு, நின்னாயகன்சென்று அங்கெழுந்தருளிய நம்மைப்பூசிக்கின், இரண்டு முண்டாகுமெனக்கேட்டு நாயகனுக்குச்சொல்ல, அந்நான்முகனங்குசென்று யமதீர்த்தமாடி வெண்பொடியக்கமணிபூண்டு, அத்தீர்த்தத்தினால் சிவபெருமானை அபிடேக அலங்கார வுபசார முதலிய செய்து துதி புகன்று, விச்சுவக்கன்மாவையழைத்து அவ்வாலயத்தைக்கனகங்கொண்டு புதுக்கி அநேகமண்டபமுதலியவைகள் செய்வித்துத்தனது பெயரால் தீர்த்தமொன்றுகண்டு வில்வவனேசன்றிருவருள் கைக்கொண்டு படைப்புத்தொழிலையும் பாரதிநேயனென்பதையும் பெற்றுத் தனது புரஞ்சார்ந்தனன், ஆதலாற் பிரமபுரம் பிரமேசரெனப் பெயர்வந்த விச்சருக்கத்தைவாசிப்பவர் கேட்பவர்கைவலம் பெறுவரென முனிவர்கட்குச் சூதபுராணிகர்புகன்றனர்.

---

பிரமபுரம் பிரமேசரென்னும் பெயர்வரவுச்சருக்கம் முற்றிற்று.

ஆ சருக்கம் கூ-இ திருவிருத்தம் உகூச.





உ

சிவமயம்.

# பத்தாவது

# அரியீசனென்னும் பெயர்வரவுச்சருக்கம்.

கலிநிலைத்துறை.

வேதனுமமப்பதிக்குமவ்வரனுக்கும்விளங்க
வோதினேமரியீசனென்பதுமினியுரைப்போங்
காதலாலிதுகேட்டவர்பலனையார்கணிப்பார்
போதவேதியரேயெனச்சூதரும்புகல்வார். ... ... (க)

பண்டுவெள்ளியங்கிரிதனிலாதியாம்பரம
னண்டர்மாமணியாடகத்தாலிழையவைசேர்
மண்டபத்தரியாதனத்தெழின்மலைமகளோ
டெண்டிசைத்தலத்தோருகந்திறைஞ்சவந்திருந்தார் ... (உ)

அந்தவேலையிலரியயனமரருக்கிறையா
மிந்திரன்றிசைத்தலைவர்கந்தருவர் நல்லியக்கர்
புந்திவிஞ்சையர்பன்னகர்கருடர்கிம்புருடர்
நந்துகுய்யகர்சாரணர்சித்தர்கின்னரரும். ... ... (ங)

மிக்கதூய்த்தவரனைவருமன்பொடுமேவி
நக்கனைப்பணிந்தவனருளேவலினலோர்
பக்கமேகியங்கங்கிருந்தனர் சுரர்பணியான்
மைக்கண்வானவர்மடந்தையர்தனிற்சிலமடவார். ... (ச)

செங்கொலிந்தனத்தழலமைத்ததிலகிற்சேர்த்துப்
பொங்குதூபங்கர்ப்பூரநற்றீபமும் பொருத்தித்
திங்கண்மாமுகத்தேவிக்குஞ்சிவனுக்குஞ் செலுத்தித்
தீங்குமன்புவீனையமுடனவரடிதாழ்வார். ... ... (ரு)

பூத்ததாரகைநேர்பொரிசிலர்கொடுபோற்ற
வாய்த்தபேர்சிலர்மந்திரமலர்கொடுசாத்த
வார்த்ததூரியமன்பொடுசிலருகந்தடிக்க
மூத்திலார்சிலர்*முளைவளைபலபலமுழக்க. ... ... (சா)

---

*முளை—வெண்மை.

சுத்தமாதவர்சிலராசிவவெனத்துதிக்க
நத்துநேர்களத்தரம்பையோடினஞ்சிலர்நடிக்க
வொத்தவித்தொனிகம்மியவிறுக்கத்தினுமைபா
கத்தர்நெற்றியிற்கனமெனச்சிறுவெயர்கலிப்ப. ... (எ)

சிந்தும்வேர்வினையரன்கனிட்டிறைகொடுதெறிப்ப
வந்தவேலையவ்வெயர்வொருதானவனாக
வெந்தழற்கணன்வேதனையழைத்துநம்வெயர்வில்
வந்தவவுணனுக்கொருபெயரியல்புறவகுத்தே. ... ... (அ)

இல்லறத்துறவதுவைசெய்தவன்பெயரியைய
நல்லமாநகர்செய்தொளிர்நவமணிக்கனகம்
புல்லுமாமுடிபொருத்தியிங்கேகெனப்புனிதன்
சொல்லுமேவலினான்மலர்வேதியன்றுரிதாய். ... ... (௯)

வேலைவாயடைந்தவனதுவிண்டொடுமுடியுஞ்
சாலநீர்மலிபாதலத்துருவியதாளுந்
தூலமேனியுநோக்கிமிக்கவும்வியந்துடனே
சீலநீர்கொடுமந்திரித்தவன்மிசைதெளித்தே. ... ... (௧0)

அக்கணத்திலவ்வவுணனைச்சிசுவடிவாக்கி
யெக்கிமுக்கியுமெடுத்துத்தன்மடிமிசையிருத்தி
வைக்குநாமமிவனுக்கெனவென்றெணுவானை
மற்கடக்கரத்தாற்*புருடியினிடைவகிர்ந்தான். ... ... (௧௧)

அந்தநோய்பொறுக்காதயன்வருந்தியுமழுநீர்
நந்துதானவன்மேற்சொரிந்தனலெனநனைப்ப
வுந்திவந்தவன்மடியைவிட்டவுணனுமொதுங்க
விந்தவேதுவிற்சலந்தரனெனப்பெயரிசைந்தே. ... ... (௧௨)

பக்கமாயழைத்தவன்பெயர்பெறவகல்பதியொன்
றக்கணத்தினினமைத்துநன்முடிபுனைந்தியாரு
மெய்க்கவாழியக்கன்மகள்விருந்தையைவேட்டுத்
தக்கசெய்தியெலாமயன்சிவனுக்கெச்சரித்தான். ... ... (௧௩)

ஏமமாஞ்சிவன்வெயர்வினிலெழுந்ததினையந்த
நாமமெய்தியசலந்தரனையர்பின்னுரை
சேமமாயொழிந்திமையவர்க்கிடர்செயநெடுநாள்
வீமமாயுழன்றனனவன்மடிவகைவிளைந்தே. ... ... (௧௪)

---

* புருடி—புருவம்.

அண்டர்யாவருநாரதன்றனைநயந்தனுப்பக்
கண்டுதானவன்கனிவுடனெழுந்துபசரித்தே
யண்டினம்பதிக்கடைசெயலுரையெனவவன்பால்
விண்டகாலையினாரதர்சிறுநகைவிளைத்தே. ... ... (௧௫)

நின்னிடத்தினிலோர்மறையுண்டதைநிகழ்த்த
வுன்னிவந்தனமியாதெனினுன்புகழ்க்கிணையாம்
பன்னிநன்கிலையவளையொப்பாருமெங்குமிலை
யென்னுங்காலையவ்வவுணனுமுனிதனையிரங்கி. ... ... (௧௬)

காந்திறற்குணமிளமையேருறுநலங்கற்பு
வாய்ந்தநம்மனையாடனையிகழ்ந்திடும்வகையை
யாய்ந்துசொன்மினென்றவுணனுஞ்சொலமுனியறைவான்
காந்தைமேன்மயலாய்ப்புகன்றனையொருகணிகை. ... ... (௧௭)

உருவயௌவனநற்குணமொழுக்கமுள்ளவளாய்
யருகுறும்வழியாய்ப்புகலுவநினக்கதுகே
ளிருமைவெண்மலைமேற்பலியேற்பவன்சிவனென்
றொருவனுண்டவன்மனையவள்குணமெழிலுருவம். ... ... (௧௮)

இளமைமுன்முற்றுமிசைந்தவளவளுனக்கிணையாம்
வளமையாதலினவளைநின்னிடம்வரவழையீ
தளவெனப்புகன்றம்முனியேகியவுடனே
ளிர்கன்மங்கையைக்கொணர்வரத்தானவனடர்தான். ... (௧௯)

அக்கணத்தினின்விருந்தையாமவன்மனைதகைத்தே
பக்கமானதன்காதலனோடுரைபகர்வான்
மிக்கபோரினில்விருப்புறுநாரதர்விள்ளும்
பொய்க்குளாய்ப்பலியாமுயற்சியின்மனம்போக்கி. ... (௨௦)

## அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

ஏகற்குத்தியன்றுலகமெல்லாம்வளர்க்குந்தந்தையரன்
பாகத்தமர்ந்தமலைமகளொப்பாருமளித்ததாயவண்மேன்
மோகித்தெழுந்திங்கெடுத்துவரமுயலுமுயற்சிமுடியாது
காகத்தினுக்கின்னமுதருந்தக்கனவுதனிலும்வாயாதே ... (௨௧)

என்றுதடுத்துமவன்மொழிக்குளிசையாதெழுந்துமதத்துடனே
சென்றுகைலையடையுமுனந்தேவரனைத்துந்தெரிந்தோடிக்
குன்றியொளிப்பச்சலந்தரனுங்குன்றுவிலியும்போர்விளைப்ப
வன்றுநாதன்வெற்றிபெறவணங்குவிருந்தைதவம்புரிந்தாள். (௨௨)

ஏலக்குழலிவிருந்தைகற்பினிகல்கொண்டவுணனெடுநாளாய்ச்
சூலக்கரத்தன்மூவுலகுந்துணிக்குந்திறத்தன்சமனொடுங்கக்
காலிட்டுதைமுக்கண்ணனொடுகதித்துப்போர்செய்வகையறிந்து
காலேக்கமலக்கண்ணன்மனங்கருதிவேடத்தெதியாகி. ... (உ௩)

தொண்டுபுரியுமாணுக்கர்சூழவிருந்தைமனைக்கடையக்
கண்டுவிருந்தையெழுந்துமனங்கனிந்துகமலப்பதத்திணையிற்
றெண்டம்புரிந்துவிணையமொடுதேவரீரிங்கெழுந்தருளப்
பண்டுதவத்தின்பயன்யாதோவென்றுமுகமன்பரிந்துரைப்பாள். (உ௪)

பாரிற்றழைக்குமுயிர்களுய்யும்படிசஞ்சரிக்கும்பதத்துறவா
யாருந்துதிக்கமுற்றமுணர்ந்தமர்ந்தோயென்றன்மனத்தினிடை
சேருங்கவலேயொன்றுளததேதென்றுலித்திரியுலகும்
*வாரமிகுந்துபணிசிவன்மேல்வாதாவெழுந்துமதத்துடனே. (உ௫)

என்றன்பதிசென்றமர்விளேப்பாணிறத்தல்பிழைத்தல்தோர்வைவெற்றி
யொன்றுந்தெரிந்ததிலேயிதுநீருரைக்கவேண்டுமெனவிருந்தை
நின்றுமொழியவெதிவேடமெடுத்தவரிகண்ணிணேமுகிழ்த்தே
யொன்றியுயர்சமாதியினுலுணர்தல்போலநகைமுகமாய். (உ௬)

கற்பின்மிகுந்தவிருந்தைமனங்களிப்பவுரைப்பரஞ்சாதே
பொற்புமிகுந்தகாரிகைநின்புருடனுயிர்க்குச்சேதமில்லே
யொப்புமெனதுகற்போராலுன்றன்பதியிங்குறைந்திடச்செய்
விப்பமெனவவரைநோக்கிவிளங்குகைலேமலேக்கேகி (உ௭)

நமதுமொழிவிண்டவனேயிந்தநகரிற்கொணர்தியெனவனுப்பி
யிமையினவனேநோக்கியங்கங்கேகுவேமென்றியம்பவவ
ளமதுமனேயிற்பலியருந்தியேகுவீரென்றுபசரிக்கக்
கமலேகேள்வனுமெதிநிற்கவவன்வரட்டுமென்றுரைத்தே. (உ௮)

தனதுமனேயிற்சென்றுசலந்தரனேப்போலவுருவெடுத்து
வனசக்கண்ணனவண்மனேயின்மறுத்துஞ்செல்கவவண்மகிழ்ந்து
நினேவிற்கணவனெனஈறுவெந்நீராற்றைலமுழுக்காட்டிக்
கனகத்துகின்மின்னவமணியின்கலங்கடரித்துமலங்கரித்தே. (உ௯)

நிலவுமுறுவல்விளேத்தகடுநிரம்பவாறுசுவையுடனே
யிலகுமமுதுமருத்திவைத்தேயிலேபாகருளித்தானுமுயர்
கலேயும்பணியுந்தரித்தசனங்கனியோடருந்திநவமணியாம்
பலபொன்னிழைத்தமஞ்சமிசைப்பதியென்றுகந்துபடுத்தவளோ. (௩0)

* வாரம்—அன்பு

கண்ணன்கலசமுலையருந்திக்கட்டியிறுக்கிக்கனியிதழை
யுண்ணுமமுதமெனவருந்தியுடையைவிடுத்தங்கூடாடிப்
பண்ணுந்தொழில்களனேகவிதம்பரிந்துபோகம்விளைத்தவுடன்
வண்ணாவிருந்தைகற்பகன்றவகையாலவுணன்வலிதொலைந்தே. (நக)

மெலியுமவனைச்சிவன்றனதுவிரலங்குலியாந்திகிரியினாற்
பலவுமுனிந்துமுடித்தலையைப்பறியவரியன்றேவுகற்போர்
மலையுஞ்செருவின்மடியுமவன்வாார்நற்சிலையும்வலிமுடியுங்
குலவியெடுத்துவிருந்தைதுயர்கொண்டுகலங்கக்கொண்டுவைத்தார் (நஉ)

வைக்குங்காலத்தடிமுடியைமாதுநோக்கிமனஞ்சிலசம்
பிக்கவெழுந்துகபட்டில்வரும்பிரியவரியையுலகளைத்துந்
தக்கவருளாற்புரந்தளிக்குந்தயவைவிடுத்துக்ஃசன்மனதா
யொக்குமெனதுநாயகன்போலுருவமெடுத்துவஞ்சனையாய். ... (நங)

ஓங்குங்கற்பையழித்ததிறு*லுபலமாகநின்மனைநீ
தாங்குஞ்சிலைநின்றலையிரண்டுந்தறிப்பகண்டேன்போலிரங்கி
யேங்கக்கூடவதெனச்சபித்தேயிறைவன்றலைவன்சிலையுடனே
வீங்குமுயிரைக்கனலினிடைவிடுக்கவரியுங்கற்புடையாள். ... (நச)

சாபத்தினினுட்கலங்கிமிகச்சலித்துவிமலவடிவகன்று
தாபத்தொடுகல்லாய்க்கிடக்குந்தகுதியெவன்கொனந்தலையுஞ்
சாபத்தினையுங்கண்டுபரதவித்துத்திருமினெந்தவித
மாபத்தடைவனென்றிதனையகற்றமனத்தினுராய்ந்தே. ... (நரு)

கோகனகத்துத்திருவையும்வைகுந்தத்தையுமின்புறுஞ்சகல
போகத்தினையும்விடுத்துலகம்புரக்குந்தலைவனெனவிருந்தும்
பூகத்தொடுகற்பகம்பொலிந்துபொங்கியுயர்பொன்மலைமுடியின்
வாகுற்றிடுபுனிதத்தலத்தின்மாயன்சிலநாண்மருவினனால். ... (நசா)

இவ்வாறென்றும்போகம்விடுத்தியைகற்புடையவிருந்தைபுக
லெவ்வாச்சாபந்தனைநினைந்துள்ளுடையுமாயன்றனைநோக்கி
மைவார்தடக்கணுகாயவாணிதேவதேவதுகிற்
செவ்வாய்ச்சலைசைநாதாநின்சிந்தைகலக்கந்தீர்வதற்கே. ... (நஎ)

தக்கவகையொன்றுளதுனதுசாபமிரண்டுந்தவிர்வதற்குத்
தெற்குவிசும்பினிடைப்பொலிந்தோர்சிந்துசையைவரையுதித்துப்
பக்கிபறவைமுதல்யாரும்படிந்தபேர்க்குக்கதியளித்து
மிக்கபாவமாந்தருவின்வேரைக்களையும்பொன்னியென்றே. ... (நஅ)

---

* உபலம்—கல்,

இலகுமதற்குத்தரதிசையினிறைக்குப்பதியாய்ப்புண்ணியங்கள்
பொலியுமிடமாய்க்காமியங்கள்பொருந்தக்கொடுக்குமகத்துவமா
யலகில்கற்பவிழுதியிலுமழியாவில்வவனமெனவோர்
தலமுண்டதனிற்சாபமகாதாபபாவமாமிருட்கே. ... ... (௩௯)

எல்லாப்பரமபாவனமாமியமன்றடமுண்டவ்விடத்திற்
பல்லார்பணியப்பயந்தவிர்க்கும்பகவனென்னச்சம்புவென
எல்லாம்வளர்க்கவல்லாளொடிறைவருறைவர்தலத்திற்
செல்லார்மேனியாய்போயச்சிவனைப்பணிந்துபூசைசெய்தால். (௪0)

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அக்கணத்தின்முக்கணத்தனருளினனவ்வாயிழை
வைக்குமிக்கசாபநீங்கிவாழ்வையென்னமாயவ
னெக்களிப்போடத்தலத்திசைந்துபத்திசெய்பவர்க்
கொக்கலாய்க்குளிர்ந்ததிங்களுதையகோடியென்னவே. ... (௪௧)

நன்மையாய்வளர்க்கவல்லாயகிக்குநாதராஞ்
சின்மயத்துருப்பொலிந்ததேவர்தம்மைவிதியுடன்
பொன்மலர்த்திரட்கொடும்புகழ்ந்துபூசைசெய்துடன்
றன்மனத்துகந்தடுத்துதாழ்ந்துவீழ்ந்திறைஞ்சியே ... ... (௪௨)

மத்தகத்தினிற்றுணைக்கைவைத்துநாசமின்றியே
யத்தரானசங்கரன்பொன்னடிமனத்திருத்தியே
யொத்தநற்றியானமாயுறைந்தசெங்கண்மாயன்முன்
றத்துயர்த்தரங்கவாரிதாவுசொன்னவல்லிபோல் ... ... (௪௩)

ஒளிசிறந்தசெஞ்சடைக்குளுற்றவிந்துரேகையுங்
குளிர்களங்கனங்கிவெம்மைகொள்பதங்கனயனமும்
வெளைமிகுந்தபொடியணிந்தமெய்யுமூன்றுபுண்டரக்
*குளமுமந்தநகைநிலாவுகொள்ளலங்கலதரமும். ... ... (௪௪)

வெருவுமாலகாலநீலமேவுநீள்கிரீவமு
மரவிசைந்தகங்கணங்கலன்கள்குண்டலங்களும்
பரிதிகோடியொளிசிறந்தபடிகமானமேனியும்
வரிபுரந்தமற்புலித்*துவக்கணிந்தமத்தியும் ... ... (௪௫)

பத்தருக்குவரமுகந்தபயமளிக்குமத்தமுந்
தத்துழைக்கையும்பல்கோடிசம்பராரியுருவமு
நத்தமொத்தகாலனைச்சினத்துதைத்தபாதமும்
வத்துவாய்க்குணங்கடந்தவாத்தியானவுருவமும். ... ...(௪௬)

* குளம்—நெற்றி.
* துவக்கு—தோல்.

விளங்கமுச்செகத்தினுக்குமேன்மையானநாதராய்த்
தளங்கலாப்பொலிந்தலர்ந்ததாமரைப்பதத்தரா
யுளங்கனிந்துசத்தையாதியோதுமூன்றுவடிவராய்
வளங்கொள்சம்புவாய்மகேசராய்க்களாமயத்தராய் ... ... (சஎ)

கருணைபொங்குவிழியராய்ச்சங்கரனெனும்பெயர்த்தராய்
மிருடராயனுமயத்தராய்விளங்குசாந்தராய்ப்
பரையெலாம்வளர்க்கவல்லவட்குகந்தபாகராய்
மருவும்வில்வவடவிநாதர்வந்துதோன்றமாயனும். ... ... (சஅ)

அன்பினாலுகந்துகந்தடுத்தடுத்திறைஞ்சியே
யின்பமுண்ணிறைந்துபொங்கியேதளர்ந்தமொழியினா
லன்பர்நேயதேவதேவவம்பிகைக்குநாயகா
மன்பொலிந்தசேகராநன்மறையறிந்தசம்புவே. ... ... (சகூ)

விச்சுவச்சொரூபநித்தவிச்சுவத்துளானவா
விச்சுவத்தினதிகனேவிகாராதாரவுருவனே
நிச்சயச்சொரூபவோசைநின்றபிர்மசொரூபனே
யிச்சைமாயையைக்கடந்தவெண்ணுதற்குருதவா. ... ... (ரு0)

தூலரூபவற்பரூபதூலவற்பரூபனே
மூலமாதியாறுதானமுங்கடந்ததாரனே
சீலமின்றியேசடச்செகஞ்சடத்துயிர்களாங்
கோலனேசடாசடத்தினுக்குமிக்கதாரனே. ... ... ... (ருக)

காரணச்சொரூபனேயதைக்கடந்தவுருவனே
நேருமேகவுருவனேயனேகவுருவவேகமாய்ச்
சேரனேகமாகியுஞ்சிறந்திலங்குமுருவனே
யாருமைந்துகோசவுருவனேயதற்குமதிகனே. ... ... (ருஉ)

யாறுகோசவுருவனேயவாறுகோசவதிகனே
வீறுதாகிவீறினுக்குவீறதானசுத்தனே
தூறுநுண்டுகட்குநுண்டுகட்களென்றசருவனே
தாறிலாப்பராபராசித்தானசங்கதாரனே. ... ... ... (ருங)

காணத்தோற்றுமுருவமதனைக்காணுநயனவுருவனே
காணத்தோற்றுதற்குநோக்குகண்ணினுக்குநீண்டவா
பூணுமனதுவாக்கினும்புகாதகன்றதாரனே
கோணுமூனமியாறகன்றுகோதிலாதவுருவனே. ... ... (ருச)

அண்டகளினம்போலும்புரியினரவந்தோன்றல்போலும்வெண்
கண்டவிப்பிதன்னில்வெள்ளிகாணல்போலுநின்னுழை
யண்டமூன்றுந்தோன்றுமாதலானுநீயொருத்தனே
பண்டுநிச்சயன்பனீரிற்பரிதிவிம்பமென்னவே. ... ... (௫௫)

உலகுதோன்றலன்றிநீயொருத்தனுக்குநின்னிட
மலியுமாயைநின்னிடத்தின்வந்தவடிவீரண்டுமே
புலவியின்றியொன்றோடொன்றுபொருந்தத்தோன்றுமுலகினி
னலகிலாதசெய்கையும்பொயாயமத்தியமைவதால். ... (௫௬)

பூதமுநிகழ்ச்சியும்பொருந்துமேனடத்தையென்
றோதுமூன்றுகாலமாகியுற்றிடுஞ்சதாசிவா
வாதியானநீயலாலிவண்டமென்றும்வேறிலை
யாதலாலுனக்குயர்ந்தவதிபர்யாருமில்லையே. ... ... (௫௭)

இற்றெழும்பசுக்கணங்களியாவுநீயவைக்கெலா
முற்றபேரெனப்புரந்துகந்தளிக்கும்பதியதாற்
சொற்றவாதிநூலுனைப்பசுப்பதியெனச்சொலு
மற்றவர்க்குமந்தநாமம்வாய்க்குமோகணுவினும். ... ... (௫௮)

தேவனேசெகம்பணிந்தசெம்பதத்தனேமகா
தேவனேதயாலயாவெனத்துதித்துநின்றுணைச்
சேவடிக்கடைக்கலம்பதிந்தவென்றனைப்புரந்
தேவலாகத்தொண்டுகொள்வையென்றமாலைநோக்கியே. ...(௫௯)

அன்பர்நேயரானவில்வவடவிநாதருண்மகிழ்ந்
தின்பமாய்விருந்தைசாபமேகும்வாறுரைப்பம்நீ
மன்பதிந்தராமனுருவாயவ்வேலைமாயையாம்
பொன்பொதிந்தமுடிவிணைக்கிப்புலம்புவாலூச்சனகியும் ... (௬0)

தக்கமாயனுமுனங்கிசத்திலேயோரங்கிசந்
திக்கினுள்ளபேர்கள்பூசைசெய்யவேசிறந்தசா
லக்கிராமமாகுவாயெனப்புகன்றுமாறனை
யக்கணத்தனுப்பிலிங்கமாகிமெய்மறைந்தனர். ... ... (௬௧)

மைக்கொள்மாலவரனைமிக்கவாழ்த்தியும்வணங்கியு
மக்கணிந்தவன்சொலாற்றனங்கிசத்திலொன்றுசா
லக்கிராமமாகியேயிலங்கவந்தப்பூசையுந்
தக்கதென்றுமூன்றுலோகத்தாரும்பூசைசெய்வரால். ... (௬௨)

இலங்கிராமனுகமெய்யெடுத்தரக்கர்கோனுடன்
மலைந்தபோரின்மாயையில்லைமந்தகத்தைநோக்கியே
கலங்கிவாயிரங்கிநொந்துகண்கணீர்சொரிந்திடப்
புலம்பினுண்மகம்புரிந்தபோழ்தபூவெழுந்தமின்

இந்தவாறினலரீசரென்றுமன்னியற்பெய
ரந்தமானவில்வநீழலண்ணலுக்கியைந்ததாம்
விந்தையிவ்விலம்பகத்தைவிண்டபேர் கவர்ந்தபேர்
முந்தைவந்தபாவசாபமுந்தவிர்ந்துவாழ்வரால், ... (சுச)

---

தத்துவமுணர்ந்ததுய்த்தவரேபூபுரமென்னுந்திவ்வியதலத்துக்குப் பிரமபுரமென்னும், அதிலெழுந்தருளும் பிரானுக்குப் பிரமேசரென்னும், பெயர்வரவை விரித்தனம். இனி அரியீசரென்னும் பெயர்வரவை விளம்புகின்றனம், கேண்மினென்று சூதபுராணிகர் விரிக்கின்றனர், வெள்ளியங்கிரியில் வீற்றிருக்கும்பரமன், ரத்னம்பதித்துப்பொன்னிழைத்த ஓர் மண்டபத்தரியணையில் தேவியுடனெழுந்தருளினர். அவ்வேலை அரியயனிந்திராதி தேவர் முனிவர் முதலிய சகலகணங்களும், வந்துபணிந்து, சிவபெருமானருணோக்கப்படியொருபுடைசார, தெய்வப்பெண்கள் வாசனைப்புகையும் தீபமும் காட்டிப் பொரிகளிறைத்துப் போற்றவும், சிலர் மலர்சாத்த சிலர் வாத்தியமுழக்க சிலர் ஹரவெனத் துதிக்க சிலர் நடிக்கவிருக்குமிந்நெருக்கத்தில், சிவபெருமானெற்றியிற் றோன்றும் வேர்வையைத் தனது சுண்டுவிரனகத்தாலெடுத்தெறிய வஃதோரசுரனுகவே, சிவபெருமான் பிரமனைப்பார்த்து, இத்தானவற்குத் தக்கபெயரும் விவாகமும் புனைந்து, ஓர் நகரம் படைத்து மணிமுடி தரித்துவாவென, அவ்வசுரனையிட்டுக்கொண்டு கடலிற்சென்று அவனது மாகமளாவியமுடியும் பாதலமுருவியவடியும் திசையை நெருக்கியவுடலையுங்கண்டதிசயித்துப் பிரமன் மந்திரநீர் கொடு சிசுவடிவாக்கி மடிமிசையிருத்தி இவனுக்கியாது நாமமிடலாமென்றுராயுமயனது நெற்றியை, அச்சிசு கையால் வகிர அதினின்று சலம் வந்தமையால், சலந்தரனென்று நாமமிட்டு, ஓரியக்கன் மகள் விருந்தையை மணம்புரிவித்து அவன் பெயரால் ஓர் நகரமுண்டாக்கி மணிமுடி புனைந்து கைலைநாதனிடம் சொல்லியபிறகு அச்சலந்தரன் தேவர்கட்கிடர்செய அந்தேவர்கள் நாரதரையனுப்பச் சலந்தரன் கண்டுபசரித்து இங்குவந்ததனையென, நாரதர் நகைத்து நின்புகழ்க்கியைந்த மனைவியிலளாதலின், உருவமிளமை நடை குணமுள்ளவளாய் நல்வழியில் வந்தவளாய் சிவனுக்கு மனையவளாயிருக்கின்றனள், அவளைக் கௌரியென்றருந்தவ

னேக அக்கலகத்தகப்பட்டவசுரன் மனைவிமொழி கேளாமல் இமையவ ர்கலங்கக்கைலையிற்சென்று குன்றுவில்லியைப்பொருதிய நாயகன் மடி யாதருந்தவஞ்செய்யும் விருந்தை கற்பில் வல்லமைகொண்டு வளர்வ தைக்கண்ட மணிவண்ணன் மாயச்சன்னியாசிவடிவுகொண்டு மாணுக்க ர் பலர் சூழ வருவதைக் கண்டெழுந்து தண்டனிட்டுத் தேவரீர் வர என்னபுண்ணியஞ்செய்தனனோவென்றுபசரித்து முக்காலமறியுந்தத்துவ ஞானியேமுத்தொழில்வல்ல நித்தனிடத்து யுத்தம்புரியுமெனது நாயக ன் இறத்தல் பிழைத்தல் தோல்வி வெற்றி இவைகளிலொன்றையுரைத் தருளெனக் கண்மூடிச்சமாதியிருந்து கண்டவர்போல் நகைத்து நின்னா யகற்குயிர்ச்சேதமில்லை நஞ்சிடரையனுப்பி யழைப்பிக்கின்றன மென்ற னுப்பி விருந்தையை நோக்கி நின்கணவன் வந்தபின் நின்மனையிற்புசிப் பமென்றேகி, அச்சலந்தரனைப்போலுருக்கொண்டு பின்னருமவளிடஞ் செல்லவே புருடன் வந்தனனெனமகிழ்ந்து ஸ்தானலங்காரஞ்செய்து இன்னமுதருத்திப்பாகிலையளித்துத் தானும் பொற்கலைநற்பணி பூண்டும ணிகளிழைத்த மஞ்சமிசைப்படுக்க, அவளைக்கண்ணபிரான் கட்டித்தழு விக்கனியிதழருந்தி உடைநெகிழ்த்துக் கலவிசெய்து போகம் விளைத்தலா லவள் கற்புநிலை குலையவே கணவன் வலிகுலைந்து சிவன்றனது கால்வி ரற்றிகிரியாலறுபட்ட மணிமுடித்தலையையும் அவன் சிலையையும், சன் னியாசியாலனுப்பிய மாணுக்கர் கொண்டுவந்து முன்வைப்பக், கண்டவி ருந்தை கலக்கங்கொண்டு நடுங்கிக் கபட்டில்வந்த மாயனைநோக்கி, என் னாயகன் போலுருக்கொண்டெனது கற்பழித்தமையால், நிமலவுரு நீங் கி நீகல்லாக, நின்றலையுஞ் சிலையுந்தறிப்ப நின்மனவி கண்டேக்கமடைய க்கடவதென்று சாபமியம்பி நாயகன்றலையும் சிலையும் கனலிற்பெய்து தானுமக்கனலிலேறினள், பின்பவ்விருந்தை தந்தசாபத்தால் மணிவண் ணன் கலங்கி நாம் நிமலவுரு நீங்கிக் கல்லாவதெவ்விதம். நமதுதலையுஞ் சிலையுந்தறிபடக்கண்டு திருமகளேக்கமுறுவதெவ்விதம், இதனையெவ்வி தமகற்றல்செய்வோமென்றுய்ந்தமனத்தினனாய், திருவைப்பிரிந்து,பொ ன்மலைமுடியிற்சின்னாளிருந்தவ்விருந்தைசாபத்தாலுள்ளமுடைந்தருந்த வம்புரிந்ததிருமாலை,ஆகாயவாணி நோக்கிஹேசலசைநாயகா,சையைப் பிறந்திவ்வையம்பொலியத்தென்றிசைசெல்லும்பொன்றிகழ்காவிரிப்பு ண்ணியநதியின்வடபானண்ணிய வில்வவனமெனுந்தலத்திற் சென்றுயம தீர்த்தம் படிந்து வில்வவனேசனையு மெல்லாம்வளர்ப்பவளையும் பூசித்து வந்தால், விருந்தை சாபவிமோசனமாய் நன்மையுண்டாகுமென, அவ் வாறேநாரணன்சென்றுதீர்த்தமாடிப்பூசித்துத்துதிசெய்து, தனதிருகர ங்களைச்சிரசிற்கூப்பி வில்வவனேசன்றிருவடியைச்சிந்தித்து நிற்குமாய

ன் முற்றேன்று மக்கடவுளை மாயன் கண்டு களித்து ஆனந்தபரவசனாய் வீழ்ந்துவிழ்ந்திறைஞ்சித் தத்துவநாமசங்கீர்த்தனஞ் செப்பி, அடியேனை நின்றிருவடிக் கடிமைகொள்ளென்றமாலை, மாயாவில்வவனேசன் மகிழ்ந்து நோக்கி, விருந்தையளித்த சாபமிரண்டில், ஒன்று நீ இராமாவதாரம் செய்வாயப்போது நினது மாயமான தலையையுஞ்சிலையையுங்கண்டு நின் மனைவிசானகிபுலம்புவள், மற்றொன்று நினதங்கிசத்திலொன்று உலகத்தார் பூசைசெய்யும்படி சாலக்கிராமமாகுமென்று புகன்று திருமாலுக்கு விடையளித்து, இலிங்கவுருவில் மறைந்தருளினர். பிறகு திருமால் பணிந்து துதிசெய்துஞ் சிவபெருமானுரைப்படி, அவன தங்கி சத்திலொன்று சாலக்கிராமமாகவே, மூவுலகத்தாரும் அதைப்பூசித்துவருகிறார்கள். இராமாவதாரமாயிராவணனோடு போர்புரியும் போது மாயச்சிலையையுந் தலையையுங்கண்டு ஜானகி புலம்பினள், இக்காரணத்தாலரியீசரெனப்பெயர்வந்த, இக்கதையை ப்படித்தவர் கேட்டவர்பாவசாப மொழிந்து மோட்சவாழ்வைப் பெறுவார்கள்.

---

அரியீசரென்னும் பெயர் வரவுச்சருக்கம் முற்றிற்று.

ஆ சருக்கம் க0-க்கு திருவிருத்தம் ௩உஅ.

---



உ

சிவமயம்.

# பதினொன்றாவது
# விப்பிரனுக்கு நேத்திரமருளிய சருக்கம்.

---

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இயல்பெறுவில்வவனத்தரனுக்கரியீசனென்னப்புவியிற்
பெயர்பெறுமேதுவிளம்பினமேல்விழிபெறவருளுதரெனப்
பயில்பெயர்வருமொருகதையுண்டதில் வெகுபக்கமிறைக்காகு
நயமுறுபுண்ணியமாமெனமுனிவரர்நத்தமொழிவர்சூதர் ... (க)

கிட்டினைநதியோரத்தினிலுயர்சக்கிரவரமெனுநகரின்
மட்டடர்வேதமுதற்கலைகற்றறிமறையவர்பலரவரி
னிட்டையரன்பதபத்திபொறுமைமறைநிறைசிவசன்மனெனச்
சிட்டமறையவனவன்மனைபுண்ணியசீலமிருந்தவளாம். ... (௨)

சீலவதியெனநாமமிசைந்தவள் சேர்ந்திருவருமகிழுங்
காலையிலேவெகுவனிதைபிறந்தனர்கண்டுமகிழ்ந்திளமை
மாலுறுவன்னியர்தன்னைவரித்துயர்மணவிதிமுறைசெய்தார்
வாலிபமேகிழுதுக்குறைவாய்மணமகனிடமவர்சென்றார். ... (௩)

புத்திரியாவருமவர்வல்லவர்மனைபுக்கியபின்னவர்தாம்
புத்திரரின்றியிரங்கியுமன்பொடுபூசுரருக்குநிதம்
மத்தமசனம்வத்திரமெனமணிமுதலாய்வெகுவிததானஞ்
சுத்தவிரதமுயர்தேவர்கள்பூசைதுவண்டுவருந்துதவம் ... (௪)

நித்தியமாகவியற்றுமவிருவர்நிகழ்ச்சியினுறும்பா
வத்தினுமோர்சுதனைந்தகனுய்வரவதுகண்டவர்வெகுதுன்
பத்தினுமின்பத்தினுமுன்புண்ணியபாவமிதென்றினிமே
லெத்தொழில்செய்வதெனக்கருதிப்பிணியைந்திடுவயதைந்தில். (௫)

நான்முறையாகமுநாலுமணிந்துமுன்னூல்பயில்விற்பவவன்
மேன்மையதாமறை*சமைபனிரண்டுமிருந்திடுமுன்கற்ற
தான்மதர்விதியுளகணிகைவிசாரித்தந்தகனெனவமையா
தேன்மலைவாகியலைந்தனமென்றுமிரங்கிவருந்தியுமே. ... (௬)

---

* சமை-வருடம்.

மனைவிதிருக்ககல்புத்திரனோடம்மறையவனிராட
றனைமனதன்னிவளங்கள்விளங்கியதன்பதிவிட்டேகிப்
பனிநதிதடமரியரனுறைகோயில்பணிந்துயர்தலங்க
ளனுதினமருளொடுசெய்துயிமதலைக்கக்சமுருதகனல். ... (எ)

அகமகிழ்வின்றிநடந்துதிரிந்தங்கங்கலையுங்கானே
மகிமைவிளங்கியநந்திசயிலமதில்வந்தபினுகினிநீர்
வெருபுனிதம்பெறசூழ்கியவுழையொருவில்வமரத்தடியின்
வயிர்வரியுழைவயினதளாதனமிசைவடமாநிழலிறைபோல். ...(அ)

சடைமுடிபொடியுடதிரிபுண்டரமுதறக்கியவக்குமணி
*வடமுறைபுயமிசைமரவுரியிடையுடன்மலர்விழிதனைமூடி
யுடன்மிசையுங்கூடமனம்பற்றுதுத்தமமகிமைபெறு
திடமூளதவசித்தியவானந்தத்தேசிகனைக்கண்டே. ... ... (௯)

உளமகிழ்வொடுமனையவண்மகவொடுமுனியுழைசென்றன்புகனிந்
திளகியமனதுடனஞ்சலிசெய்தவனெதிர்நிற்கமுகுர்த்த
மளவுமதன்பின்முனிவிழிமலர்தரவடியில்விழுந்தவரை
யளிவினைதவசித்தியவானந்தனழைத்துயர்வேதியனை. ... (௧௦)

எவ்விடம்விட்டிங்கெய்தினையினியேகுதலெவ்விடமென்க
வவ்வியமின்றியசிவசன்மாவெனுமந்தணனும்புகல்வா
னவ்விவிளங்கியகிட்டினையருசொருநகர்சக்கிரவரமென்
றெவ்வுலகுந்துதிசெயவுண்டந்நகரெய்தியிசைந்திடுநாள். ... (௧௧)

*எங்களிடத்தமுதம்பலவுருவெனவேய்ந்தவெழிற்சுதைகள்
பொங்கவுதித்தனரங்கவர்தம்மைப்போற்றிவளர்த்துவருந்
தூங்கமிகும்வன்னியர்கட்கருமறைசொல்லியவணமீந்தே
மங்கலமுற்றவரவர்வல்லவர்மனைமன்னினபின்னயர்வாய். ... (௧௨)

*பலபுத்திரிபெற்றென்னோர்புத்திரபாக்கியமில்லையென்னிற்
றலமுந்தனதானியமுமினம்பலசம்பத்தும் பெற்றென்
னிலகுமிகப்பயனும்பரபயனுமெய்தாதெழுமையினு
நலனும்விளங்காகுலனும்விளங்காநரகப்பயனுகும். ... ... (௧௩)

*கந்தமிலாமலர்திங்களிலாநிசிகற்றறிவுறுபுலவர்
குந்தலிலாவனைகண்களிலாவுடல்கொங்கையிலார்சயன
மைந்தனிலாமனையென்றுவமிப்பவர்வாய்மையினுறுமொழியைச்
சிந்தையிலுன்னின்னைந்தனம்யாதாற்சேயடைகுவமென்று. ... (௧௪

*எண்ணியதைத்தரும்புண்ணியமொன்றேயென்றெண்ணிப்பலவாம்.
புண்ணியமுய்த்தனமந்தகனுயொருபுத்திரனுற்றனன்முன்
பண்ணியவினைநண்ணியதென்றேம்பிப்பகர்வயதைந்தினினூ
னண்ணியவிதிமுந்நூலணிவித்துநலந்தருமறைபயில. ... (௧௫)

*ஆண்டைராறிலருமறைகற்றனனுயினுமந்தகனு
யீண்டியதாற்பலகனிகைவிசாரித்தியையாதேங்கிமனம்
வேண்டியநதிபலமூழ்கித்தானம்விதித்தரியானுறையுங்
காண்டகுதானங்கண்டுஞ்சேய்க்கிருகண்களுமுறுதலால் ... (௧௬)

*முகமுமெலிந்தகமகிழ்வுமிழந்துமுயற்சிதருங்கால
மகிமைவிளங்கியநின்னடிகண்டுவணங்கினனின்னருளாற்
சுகமுறவிருவிழிபெற்றிமதலையுறுதுயரகல்செய்வாயென்
றகமகலந்தணன்மொழியவுநித்தியவானந்தனெனுமுனி. (௧௭)

அச்சிறுவன்பயன்முற்சன்மவினையறிந்துதெளிந்தறைவா
னிச்சகமிசைகொங்கணமெனநாமமிலங்கொருதேயமதின்
மெச்சியபாடலிபுரமெனுநகருறைவிப்பிரனிவன்வெகுபேர்
துச்சனனெனமறைபயில்வோர்தம்மைத்துடித்ததிமதமாய். (௧௮

மனைதன்மகவில்லவளொடுகூடமகிழ்ந்துயர்புண்டரமிட்
டனகமெனும்பொடியக்குமணிச்சரமன்றிநிதஞ்சிவநிந்
தனையவரடியவர்தனைநிந்தனையொடுதாழ்வுமொழிந்துயர்வோர்
புனைபுண்டரமிட்டவரெனவுணவுபொருந்தவளித்தரனுர். (௧௯

அடியவராயக்குமணிவிபூதியணிந்தவரைக்கண்டால
வெடிகுரலொடுகிட்டினகிட்டினவெனவிண்டிருகண்மூடிக்
கொடுநெறிசெய்வதினுலவன்மனையிற்கோதறுகலையுணர்வோர்
விடமணிசிவனடியாருயர்மறையவர்மேவிலரவ்வேலை (௨௦

உச்சிப்பொழுதிற்பசிதாகத்தினுழன்றுபின்மாணுக்கர்
நச்சக்கண்ணுவமுனியசனத்தினைநண்ணியவன்மனையை
மெச்சிச்செல்குமுனவனிவரதுசிவவேடமதைக்கண்டே
தச்சிற்செய்தகவாடமடைத்துச்சடிதியினுட்போனன்; (௨௧)

ஷை-வேறு

அப்படிச்செலுமவனைமிக்கவதட்டிமுனிவொடுகண்ணுவர்
விப்பிரர்க்குளிகழ்ச்சிபெற்றிகழ்வேட்டுவோபசிதாகமா
யெய்ப்பினைப்பொடுவந்தநம்மையிகழ்ந்ததாலுமுருத்திராக்
கப்பருஞ்சரம்வெள்ளைநீறணிகடவுளன்பரைநிந்தனை. (௨௨)

பேசகந்தையினுறுமினிநீபிறவியந்தகனென்னவே
யேசயாவருமூன்றுசன்மமெடுப்பையென்றுசபித்தலூர்
வாசவிப்பிரரன்புசெய்யமகிழ்ந்துசென்றனரவனுமவ்
வாசுகொண்டிருசன்மமந்தகனுகிப்சனனத்தினின். ... ...(உ௩)

நற்றவஞ்செயுமுங்களுக்கிருநயனமின்றியசேயதா
யுற்றனன்சிவபத்திசீலமொழுக்கமுளவுங்கட்குவின்
புற்றமகவெனவந்ததால்விழிபொருந்துமவ்வழிபுகலுவாங்
குற்றமற்றுயர்தக்கணக்*கருபப்புவிக்கொருகங்கையாய். ... (உ௪)

சையமால்வரைவிட்டிழிந்துசகத்தினைப்பரிசுத்தமாய்ச்
செய்யவினைவிளையாதகத்திரடரமகிமைவிளங்கியே
துய்யகாவிரியென்னவோர்நதிதோன்றுமதற்குவடக்கினின்
வையகம்புகழ்வில்வவனமெனமகிமைகொண்டதிபொங்கமாய். (உ௫)

அட்டசித்திபலிக்கவேதிரமாகியோர்பதியுண்டதி
னெட்டுமாதிரஞ்சூழுமுலகினின்யாரையும்புனிதஞ்செய
மட்டிலாதமகத்துவத்தொருமறலிதடமுண்டவ்வுழை
வட்டமாகியநீவிர்சென்றவ்வரன்றடத்தினின்மூழ்கியே. ... (உ௬)

ஈசராய்முற்றும்வளர்ப்பவளிறைவராய்வில்வாடவி
வாசராய்வளரிறைவர்பாதம்வணங்கியேத்தியுமனமகிழ்ந்
தேசமாதிசெய்தவ்விடத்திலிசைந்துவாசமுறைந்திடின்
மாசுகொண்டவுன்மைந்தனுக்கவர்மலரும்விழியிணையருளுவார்....(உ௭)

என்றமுனியையிறைஞ்சியிருவருமெச்சமோடுமெப்பதிதனிற்
சென்றுமறலிதடம்படிந்துதுதிக்குமன்பர்தழைக்கவே
நன்றுவரமருணீடுவில்வவனத்தின்மேவியவத்தரோ
டொன்றியாவும்வளர்க்கவல்லவளுபயபாதமிறைஞ்சியே. ... (உ௮)

துதிபுகன்றரனைச்சமாதிதொடங்கிநின்றுதினந்தின
மதியின்வைத்துவணங்கியுஞ்சிலமாதமங்கணிருப்பவத்
துதிவணக்கமுழுக்கினுற்பரிசுத்தமாயரனருளினுன்
மதலையின்புறவிழிதெளிந்துவயங்கவவனுமவரனையே. ... (உ௯)

பார்த்துமகிழ்வுடனின்பவாரிபடிந்துகந்தமனத்தொடுந்
தோத்திரஞ்செயவன்னைதந்தைதுதித்தரன்றனையேத்திமேற்
கோத்திரங்குணமழகுசீலமிகுந்தகன்னிகைதேடியே
சாத்திரப்படிவதுவைசெய்துதழைத்துமுறைமுறையாகவே. (௩௦)

* கருபம்-திசை.

சகலபோகமருந்தியக்குதழைத்துமுத்தியுமுற்றனர்
மகிவிளங்கிடசுதன்மகிழ்ந்திடமலரிணைக்கணளித்ததா
லிகல்படைச்சுமவரனைவிழியருளீசரென்றுவழுத்துவார்
மகிமையுற்றிடுமேழுமாதர்கள்வந்தவகையும்விளம்புவாம். ... (௯௧)

என்றசூதரைமுனிவர்மானையெடுத்தணைத்தருள்வன்னிசெய்
கின்றதென்னவதற்குமேலிதுகிளத்தலாமெனச்சூதரு
நன்றெனப்புகழ்ந்தவன்னிடத்தையங்குதவஞ்செய்தே
யென்றுமின்புறுவீடுவில்வவனேசரருள்கொண்டெய்தினன். ... (௯௨)

---

உலகம்பரவும் வில்வவனநாதனுக்கு, அரியீசனென்னும் பெயர்வர வுரைத்து விழியருளீசரெனப்பெயர்வரவை விரிக்கின்றனமென்று சூத புராணிகர் முனிவர்களுக்கு விளம்புகின்றனர், கிருட்டிணை நதியருகில் சக்கிரவரமென்னுநகரில் வசிக்குமந்தணருள், பத்திநிறைந்த சிவசன்ம னென்னுமோர் மறையவன், சீலவதியென்னுமனைவியுடன் மகிழ்ந்துசே ருங்காலங்களிற்பிறந்தபெண்கள் பலரையும் வளர்த்து அமையும்பருவத் து, வன்னியர்கட்கு மணம்புரிவித்து, அவரவர்மனைக்கனுப்பியபின், ச ந்திரனில்லா வானம்போலுமைந்தனில்லாதமனையென்று புத்திரனில் லாமல் வருந்தி, தவந்தானம் தருமம் பலவற்றைச்செய்த நல்வினையினு ம், முற்செய்ததீவினையினும், நேத்திரமில்லாது, ஓர் புத்திரன் பிறக்கப் பெற்றோரிருவருந்துன்புற்று, பாவபுண்ணியப்பயனென்று மனக்கலக்க த்தோடம்மகவைவளர்த்து, முந்நூல்புனைந்து, தொன்னூல் துவக்கி வேதமுற்றுஞ்செவியாலுணர்ந்து வல்லவனாகிப் பன்னிருவயதில் நன்ம ணம்புரியக்கன்னிகை விசாரித்து, அந்தகனுக்குதவினிசையாது, எனலைந்த னமென்றிரங்கிய தாயுந்தந்தையு மிப்புத்திரன் விழிபெறும் விதந்தேட வேண்டுமென்று யாத்திரைசெயக்கருதி மூவரும் புரம்போந் துபலபுண் ணிய தீர்த்தங்களிற்படிந்து, அங்குள்ள சிவஸ்தலம் பலவற்றைப்பணி ந்தும் புத்திரன் விழியுறாமையால்,வருந்தியங்கலையும்போது,மகிமை தங்கிய, நந்திமலையின் பிநாகினிதீர்த்தம்படிந்து, ஓர்வில்வமரநிழலில் புலியதளில் வடகீழலிலுறையுந் தட்சணாமூர்த்திக்கடவுள்போலும், கண் மூடி, நிட்டைகூடிய நித்தியானந்தயோகீச்சுரனைக்கண்டு மூவரும்பணி ந்து அன்புகனிந்து நேர் நிற்க வோர்முகூர்த்தநேரங்கடந் துகண்மலர் ந்தமுனிவனடியையமற்றும் பணியக்கண்ட அருள்சுரந்த அம்முனிவன் அன்புமுதிர்ந்த அவர்களை நோக்கி, எங்கிருந் துவந்தீர், இனியேகுதலெ ங்கெனவே, அச்சிவசன்மன் ஆதியோடந்தமாக நடந்தவை முற்றுமொ ழிந்து, முயற்சியால் முடியுங்காலம்வர, நின்றிருவடி சார்ந்தனம், தே வரீர் திருவுளமிரங்கி; இப்புத்திரனுக்கு விழியருள் செயல்வேண்டுமெ ன்றிரக்கவே, அம்முனிவன். முற்செய்வினைதெரிந்து மொழிகின்றனர்.

கொங்கணதேயத்தில் பாடலிபுரமென்னுநகரில் வசித்தபிராமணனாகியவிவன், மதத்தினால், மறைபயிலு மறையவரைத்தூஷித்து, மனைவிபுத்திரன், இவர்களை விபூதிருத்திராக்கமணியாது, நெற்றியிலூர்த்தபுண்டரந்தரிக்கச்சொல்லித்தானுந்தரித்து, சிவநிந்தனை அடியவர் நிந்தனைசெய்து வூர்த்தபுண்டரந்தரித்து வருபவர்க்குவெளித்துச் சிவசின்னந்தரிப்பவரைக்கண்டால் இடித்த குரலொடு கெட்டினை கெட்டினையென்று கண்களை மூடிக்கொடிய பாதகஞ்செய்ததாலிவன் மனையில்பெரியவர் மறையவர் அடியவரிவர்கள் மேவாது வருங்காலத்துச்சிப்போதில் பசிதாகத்தால்வருந்திச் சீஷர்கள் சூழக் கண்ணுவமுனிவர் அமுதுண்ணும்பொருட்டு, இம்மறையவன் மனையிற்செல்குமுனிவரது சிவவேடங்கண்டு கதவடைத்துப்போகக்கண்ட முனிவரதட்டி, விப்பிரகிராதா, பசியிளைப்பில் வந்தவெம்மை மதியாது சிவநிந்தனை செய்ததால் நீ,மூன்றுசனனம் பிறவியந்தகனாகப்பிறக்கக்கடவையெனச் சபித்து மற்றப்பிராமணாரமுதுசெய்விக்கப்புசித்து மகிழ்ந்துசென்றனர். பின்பச்சாபத்தையேற்றபாதகப்பிராமணன், இரண்டு சனனமந்தகனாகப்பிறந்து, இச்சனனத்தில், நற்றவஞ்செய்யுமுங்களுக்குப்பிறந்த, இவ்வந்தகப்புத்திரன், விழிபெறும் விதம்புகல்கின்றனம்.

தக்கணதிசைக்கோர் கங்கையாகச் சையையினின்றிழிந்து உலகத்தைப்பரிசுத்தஞ்செய்து பாவங்களைப்போக்கி மகிமைமிகும்பொன்னிநதிக்கு வடக்கின்கண், சகலசித்தியுந்தந்து புகழைப்பெறும் வில்வவனமென்னுந்தலத்திற்சென்று மகத்துவமிகுந்த மறலிதீர்த்தம்படிந்து, யாவும் வளர்ப்பாள் பாகனாகிய வில்வாடவிவாசன்றிருவடிவணங்கித்துதித்து நிட்டைகூடிச்சிலநாளங்கு தங்குவீராயின், உங்கள் புத்திரனுக்கு விழிதந்தருளுவரென்ற முனிவனை வணங்கி மூவரும்,அப்பதியிற்சென்று யமதீர்த்தமாடி, வில்வவனேசரையுஞ் சர்வரட்சகித்தாயையும் பணிந்து துதித்துச்சிலநாள் தங்கவே, அத்துதியினும், வணக்கத்தினும் முழுக்கினும், பரிசுத்தமாய்ச் சிவபிரான்றிருவருளால் விழிமலர்ந்த புத்திரன் மகிழ்ந்துதுதிக்கவேபெற்றவருந்துதித்து,எண்ணியபயனைப்பெற்றபின், கோத்திரங்குணம் நடைபழகு முதலியவற்றிற்சிறந்த, கன்னிகைதேடி, அப்புத்திரனுக்கு விதிப்படி வதுவைச்சடங்குசெய்து பேரின்பமுற்று, அங்கு முத்தியும் பெற்றனராதலினக்கடவுளுக்கு விழியருளீசரெனப்பெயர் வந்தனவென்ற சூதமகாவடிகளை, மாணைப்புரந்தவன்னிசெய்கையென்னவென்றமுனிவருக்கு, அங்குதவஞ்செய்து வில்வவனேசரருளினாற் பேரானந்தவீடுபெற்றனனென்று சொல்லியருளினர்.

---

விப்பிரனுக்கு நேத்திரமருளியசருக்கம் முற்றிற்று.

ஆக சருக்கம ௧௧-க்கு திருவிருத்தம் ௩௯௦.

---





சிவமயம்.

# பன்னிரண்டாவது
# சத்தகன்னிகள்வரவுச்சருக்கம்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

எனவிண்டமாதரெழுவோருமங்கணியையேது சூதர்மொழிவார்
முனநன்குறுந்திரேதாயுகததின்முனிவீர்கள்கேளுமொருநாள்
மனமீதிலூதரவிலேடுமேழுமடமாதர்கூடியவர்வா
கனமீதிலேறியங்கங்கிலங்கு ஈகனஞ்சகங்கணகரம். ... ... (௧)

தடமோடைகூபஙிமலஞ்சிறந்தசலமண்டர்தங்கியதலம்
படகந்தரங்குவடுதுயயவையர்பவனம்பொலிந்தநிகண்
டெல்சிந்தையும்புளகிதஞ்சிறநதுவகையாய்வியநதுவருகாற்
புடைகொண்டகோமதிநதிக்கடுத்தபுனோநாளிகேரம்வகுளம். (௨)

பனைபிண்டிசூதமீந்தாலம்வாழைபனசங்கடாரைதிலகஞ்
சினைகொண்டுயர்ந்தமந்தாரைகோங்குசெறிசண்பகங்கமுகசந்
தனமாதுலங்கமகில்வில்வம்வஞ்சிதழைபாடலங்கடளவ
நனைகொண்டசாதிகமழ்கொண்டிலங்குநளினங்கொளோடைவளமும்

குயில்கிள்ளைகூவுமொழியுஞ்சிறந்துகுறைவின்றியிக்கவெழிலா
முயருந்தவத்தின்மிகவுந்திறத்தவுந்தாலர்நந்தவனமேன்
மயல்கொண்டுசென்றுகனிகண்டருந்திமலர்கொய்தணிந்துமதுவுண்
*டயமேலிறங்கியமலங்கலங்கவதிபோதகந்தைசெயவே. (௪)

அதுகண்டிலங்குமுந்தாலனென்னுமறவன்சினந்துநயனங்
கொதிகொண்டவங்கியெனவேசினந்துகுளிர்நந்தவஞ்செய்காவை
மதிமிஞ்சிவந்துமதியாதழிக்கும் வகையானவுங்களொட்டு
விதமானசிதஇயலியாதெனச்சபித்தார்தவத்தைமெய்த்தார். (௫)

அக்காலைமாதரெழுவோரும்வெட்கியலமந்துழன்றுமெலிவாய்த்
திக்கானனத்தனருகேகியெங்கடிறமாகுமட்டசித்தி
தக்காமலேகவுந்தாலரிட்டசாபந்தவிர்த்துமுன்போன்
மிக்கானசித்திபெறுமாறெமக்குவிள்வாயெனப்புகலவே. (௬)

---

*அயம்—தடாகம்

அவ்வேலைவேதன்மதியுன்னிமாதரனைவோருமின்பமுறவே
யவ்வாதநித்தனெல்லாமுணர்ந்தவன் சங்கரன்பொறையினன்
செவ்வானமுக்கணிறையன்றிவேறுசிலர்பாரினில்லையவனே
யொவ்வாதசத்திபெறுமாறுரைக்குமுபதேசகர்த்தனதனால். (எ)

ஒருசிந்திலங்குதென்பாரிலுண்டிவ்வுலகெங்கணும்புனிதமாம்
வரையென்றசையையதினின்றிழிந்துவழிகின்றபொன்னியெனவே
வருமந்நதிக்குவடபாலிறைக்குமகிழ்வானவில்வவனமுண்
டருகாமதற்குளகமுற்றுமஞ்சியகலும்படிக்குமறலி. ... (அ)

தடமுண்டதன்கண்வில்வாடவீசர் தழைமந்திரம்பொலியுமவ்
விடைதென்றிசைக்குளடியார்கணேசனெனவே நினைத்ததருள்வோன்
வடநீழலிற்கமையினோடுதெற்குவடிவாயிருக்குமவர்பாற்
றிடமாயடைந்தவரைவேண்டிலுங்கடிரமானசித்திதருவார். (௯)

வேறு.

என்றுவேதன்புகலவுடனேழுமாதர்களுமினிதாமிதென்றுமகிழ்வாய்
நன்றுதருசகலசித்திக்குமொருதாவென்னுநல்லவில்வவனத்தினிற்
சென்றியமகுண்டத்தினீராடியெல்லாஞ்சிறந்திடவளர்க்குவல்லாண்
மன்றல்புனைசங்கரரெனும்வில்வநாதரிருமலரடிபணிந்தவர்க்கே. (க0)

தென்பாலினமுநகலசஞ்செழுந்தழலரவுசேர்பொத்தகந்தரித்தே
யன்பானசீதளக்கடைவிழியுடன்சித்தமைந்தமுத்திரைபிடித்தே
மன்பாரழிந்தாலுநாசமில்லாதென்றுமகிழ்தக்கணனைத்தன்
முன்பாயுறைந்துகண்டடியிணைவணங்கிநன்முடிமிசைகரங்குவித்தே (கக)

தேவதேவேசசசிசேகராவன்பர்கள்செழிக்கப்புரந்தகுருவே
காவலாசித்துமுத்திரைவிளங்கியமலர்க்கையாகுணங்கடந்தோய்
மேவுபசுபாசகரசீதளக்கடைநயனவீக்கணுமுற்றுமுணர்வோ
யேவல்புகல்குருவினுக்குங்குரவனானவாயேழையார்க்கைந்துதருவே.

சீருறுகுகாலயாசிவவுருவுகொண்டிலகுதெக்கணாமூர்த்தியேயென்
றேருறுந்துதிபலவுரைத்துன்னையேயடையுமெங்களைக்காத்துகந்தே
வரமொடுமுந்தாலர்சாபத்திறலேகிமடிவானசித்திமுன்போற்
சேரவுபதேசமுறையென்றவெழுமாதர்முன்சித்திபெறவேபுகன்றார்
(க௩)

இவ்வாறுதக்கணாமூர்த்தியருளாற்பின்னுமெட்டுவகையானசித்தி
மைவார்கண்மாதர்களடைந்துருவமொளிவலிசிறந்தவரைவிட்டேகவே
யொவ்வாமனத்தராயன்புகொண்டவர்முனமுறைந்துயர்கணங்களெங்
[குங்
கவ்வாதரற்றியானத்தவம்புரிவரெழுகன்னியர்களின்னமாதோ. (க௪)

அன்புமுதிர்ந்த அருந்தவமுனிவர்கட்குச் சூதபுராணிகர் வில்வவனமென்னுந்தலத்துக்குச் சத்தகன்னிகள் வரவுரைக்கின்றனர். திரேதாயுகத்திலோர் ஞான்று சப்தமாதர்கள் தமதிச்சையால், தந்தம்வாகனமீதேறி நினைத்தவிடங்களிற் சஞ்சரித்து, கோமதிநதிக்கருகில்: புட்கள் புலம்பும் பூக்கணிறைந்த பலதருக்கள் பொலிந்து செழிப்புற்ற, உந்தாலமுனிவரது நந்தனவனத்தை நண்ணி, அதிலுள்ள கனிகளைப்பறித்தருந்தி, மலர்களைக்கொய்தணிந்து, மதுக்களைப்பானஞ்செய்து, ஆங்குள்ள தடாகத்தைக்கலங்கச்செய்யுமகந்தையை, உந்தாலமுனிவர் கண்டு அக்கினியெனக்கண்சிவந்து சோபித்து நமதுகட்டளைமதியாதழித்தவுங்கட்குப்பலிதமாகிய அஷ்டமாசித்திகளும் பலியாமற்போகக்கடவதெனச்சபிக்க, அச்சப்தமாதர்கள் வெட்கி மயங்கித்தலைகுனிந்து பிரமதேவனிடஞ்சென்று, முனிவர் தந்தசாபங்கழிந்து முன்னம்போலச், சித்திகள் சித்திக்கும் வகைபுகலவேண்டுமெனவேண்டவே, அப்பிரமன் யோசித்து முற்றுமுணர்ந்த சங்கரக்கடவுளொன்றி, உங்களுக்குச் சித்தியையாவரீயவல்லவர். அவர் உபதேசகர்த்தராதலால் தென்பாரில், உலகத்தைப்பரிசுத்தஞ்செய்யச் சையயினின்றெழுகும் ஒப்பற்ற பொன்னிநதிக்கு வடபால், அழகிய வில்வவனமென்னுந்தலத்தில், பவத்தைப்பரிகரிக்குமகத்துவயமதீர்த்தமாடி, வில்வவனேசரைத்தரிசித்து, அவ்வாலயத்தில், தென்முகநோக்கி வடநிழலிருந்து, வேண்டுவார் வேண்டுவதையீயவல்ல, தட்சணாமூர்த்தி சன்னிதியிற்சென்று பணிந்து வேண்டுவீராயினுண்டு பெறுவீரெனவே, அத்தலத்திற்சென்று நீராடி, சர்வரட்சகியையும் வில்வவனேசரையுந்துதித்து, தென்பாற்பொலியுந் தட்சணாமூர்த்தி சன்னிதிபிற்சென்று திருவடிவணங்கி, முடிமிசைக்கரங்கூப்பி அக்குரவனது சீர்த்தியைத்துதித்து, அடியேம் உந்தாலமுனிவர் சாபமொழிந்து, முன்னம்போலஷ்ட சித்திபெற்றுய்யும்படியருள்செயவேண்டுமென்ற அம்மாதர்களுக்கு, அஷ்டசித்தியையுமுபதேசஞ்செய்தருளிய பின், அம்மூர்த்தியை விட்டுப்பிரிய மனமில்லாராய் அவர் சன்னிதிமுன்னர் நாளுந்தவஞ்செய்துகொண்டிருக்கின்றன ரென்றுரைத்தனர்.

---

சத்தகன்னிகள்வரவுச்சருக்கம் முற்றிற்று.

ஆக சருக்கம் கஉ-க்கு திருவிருத்தம், ௧எ௪.

---



உ

சிவமயம்.

# பதின்மூன்றாவது
# எல்லாம்வளர்க்க வல்லவளென்ற பெயர்வரவுச் சருக்கம்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

என்றசூதரைமுனிவர்வில்வவனமகிமையெல்லாமுணர்ந்தோமின்னமுண்
டொன்றந்தவகையாதெனிற்பரைக்குப்பெயருகந்துயாவும்வளர்ப்பா
ளென்றுபெயர்வந்ததென்னென்றுசொலவேசூதரின்பமோடவகையுரை [ப்பார்
மன்றல்செறிவில்வவனமட்டெலாமுன்கோள்கண்மாறுபாட்டால்வறண் [டே. (௧)

வருடமில்லாதுநதிவாவிகூபந்தடமும்வற்றிநீர்பயிர்பசும்புற்
றிரணமுதலின்றிப்பசுக்கண்மானிடர்பறவைசேரவுமடிந்துசிலபேர்
புரம்விடுத்தங்கங்குசெல்கவேனையரெலாம்போந்துவில்வாரணியமே
சரணமென்றரைகூடிபுகையகலமாகுந்தலங்களெல்லாம்பரவவே. (௨)

தன்னதுதலத்தின்வந்தெய்தித்தவிக்குஞ்சனங்களைமகிக்கெலாமோ
ரன்னையெனுமம்பிகையருட்பார்வையானோக்கியக்கணநீலமேக
மென்னவுருவங்கொண்டுதன்னதுதலத்தெல்லையாவுமழைபொழியமுன் [போன்
மன்னுநீர்பயிர்புற்றிரணமாந்தர்பறவைபசுவர்த்தனையதாகும்வகையால்.

மலைமகட்கெல்லாம்வளர்க்கவல்லவளென்னமன்னுதிருநாமமெய்துந்
தலமதிலுயர்ந்தவில்வாடவியினீழலுறைசம்பியமனங்கிதீர்த்தம்
மிலகும்வகையாவும்பொழிப்பாயகந்தொலையவேயியம்பினமிக்கதை
நலமொடுபடித்தவரருந்தினர்மதலைகல்விநவமணிதனந்தானியம். (௩)

பெருகமறையோதுபடிவாழ்ந்துபின்சிவபதம்பெறுவரந்தத்தலத்தின்
பரிவுசிவபத்திமிகுவிப்பிரர்க்கசனநீர்பசும்பொனுடைதானியங்கள்
பரிவுடனளித்தபேர்பலனையரிபிரமனும்பகர்வதற்கெளிதல்லமற்
றொருதலத்தினினூறுவிப்பிரற்காறுசுவையுடனன்னமிட்டபலனும். (௫)

கலித்துறை

அப்பதிதனிலொருமுட்டியளித்தவர்பெறுபலனுக்
கொப்பலவதனான்மகிதனிலுயர்வில்வக்காவுக்
கப்பணியச்சிவனுக்கவரணைசத்தியுமைக்கு
முப்புவனத்திலுமிணையிலைமுக்காலத்திலுமே. ... ... (௬)

இத்தலவைபவமுற்றும்மெழுதிப்புத்தகமாய்
வைத்தர்ச்சனைசெய்தத்தனைமனதுன்னிவணங்கும்
பத்திச்சதுர்மறையோர்கள்படிக்கும்படியீந்தாற்
சித்தத்தினினைக்கும்பொருள் சேர்ந்தேசிவமடைவரர். ... (எ)

இச்சரிதைபுகலும்வேதியரின்புறநற்கந்த
மச்சுதமுடைகாதணியங்குலியங்கடகமுதன்
மெச்சியவணிதனதானியமிகுமன்புடனருளி
யுச்சிதயானங்கந்துகமும்பன்மிசைவைத்தே. ... ... (அ)

அன்பொடுநகர்வலஞ்செய்வித்தனமுங்கொடுப்பார்க
டுன்புறுமெல்லாவகமுமொழிந்துசுகம்பெறுவர்
பொன்பரிவொடுசூழச்சந்ததமுமிப்புவியி
னின்புறுமுயர்போகந்துய்த்திறைபதமடைகுவரால். ... (கூ)

அதனுலிகபரம்வேண்டினராற்றன்மிகச்செய்துந்
துதிசெய்துமகிழ்ந்தன்பொடுசுருதிக்கிறையவர்பரன்
முதிராவமுதாமிக்கதைமுழுதுங்கவர்வார்க
ளிதுசத்தியமிதுசத்தியமெனுஞ்சூதரைமுனிவோர். ... (௧0)

சந்தனமச்சுதமலர்கனிதகைவற்கலையானுஞ்
சிந்தையின்மலியன்புடனர்ச்சிக்கவுமகிழ்வாயவ்
வந்தணரிடைவிடைகொண்டுபுராணக்கடலாகிச்
சந்ததமுயர்சூதத்தவர்தந்*தாபதஞ்சார்ந்தார். ... ... (௧௧)

கலிவிருத்தம்.

உலகமேத்துமொருமுதல்வாழியவ்
வுலகெலாம்வளர்த்தோம்புவள்வாழியோ
யுலகினுன்மறையோர்களுஞ்சைவரு
முலகில்வாழ்பல்லுயிர்களும்வாழியே. ... (௧௨)

---

திவ்விய வில்வவனமென்னுந் தலத்திற் சத்தகன்னிகள் வரவுரைத்த சூதமகாமுனிவனை முனிவர்கள் வணங்கி, அடிகள் சொல்லிய தலதீர்த்த மூர்த்திவிசேடமியாவுமுணர்ந்தனம், உணராததின்னமொன்றுண்டு. அஃதியாதெனின் கைலாயத்திருந்து சிவபெருமானோடு விடையூர்ந்து வந்து அத்தலத்தெழுந்தருளிய தேவிக்கெக்காரணத்தாலெல்லாம் வளர்ப்பவளெனநாமமியைந்ததென்பதென்ற முனிவர் கட்குச்சூதமுனிவர் புகல்கின்றனர். முற்காலத்தில் நவக்கிரகங்கள் மாறுபட்டு மழையின்றிப் பூமிவறண்டு நதிவாவிகூபமுதலியனவைவற்றி பயிர் புல் பூண்டு

*தாபதம்—முனிவரிருப்பிடம்.

மூளைத்தலின்றி,மனுடர் பசுமுதலியவிலங்குகள் பட்சிகளிவைகட்குணவி ன்றிச்சிலமடியசிலதூரதேயங்களுக்குச்செல்ல சிலவில்வாரண்யமே சரணென்றடைந்து தவிப்பக்கண்டு இவ்வுலகுக்கோர் தாயாகியவம்பிகையானவள் கிருபாநேத்திரத்தாலேநோக்கி, அக்கணமே நீலமேகவுருக்கொண்டு மழையைப்பொழியவே, முன்னைம்போல் நீர் பயிர் புல்பூண்டு மனுடர் விலங்குகள் பட்சிகள் வர்த்தித்து மகிழ்ந்து செழிப்பாயினதாலுமையவட்கெல்லாம் வளர்க்கவல்லவளெனப்பெயரெய்தியதென்று சொல்லி அவ்வில்வவனத்தெழுந்தருளிய மூர்த்தி தீர்த்தமுதலிய வரலாற்றைப் பவம் நீங்கப் பொழிப்பாக வியம்பிய விக்கதையைப் பத்தியாகப் படித்தவர் கேட்டவர், புத்திரரையுஞ் சல்விநவரத்தினந்தனந்தானியங்களும் பெருகப்பூமியில் வாழ்ந்து சிவபதம் பெறுவார்கள். அத்தலத்தில் பத்திமிகுந்த பூசுரருக்கமுது சலம் வஸ்திரம் பொன்தானியமளிப்பவர்பயனை, அரிபிரமனாலுஞ் சொல்வதற்கெளிதல்ல, வேறுதலத்தில் நூறு பிராமணர்க்காறுசுவைப்போசனஞ்செய்வித்தபலன் அத்தலத்தோர் முட்டியளிப்பவர் பலனுக்கீடாகாது. ஆதலால் அத்தலதீர்த்தமூர்த்தி சத்திக்கொப்பாக வெப்புவனத்திலுமில்லை. இத்தலமகத்துவத்தையெழுதியபுத்தகத்தைப் பூசிப்பவர் படிக்கக்கொடுப்பவர் படிப்போர்க்குச்சந்தனந்தாம்பூலமச்சுதம் வஸ்திரங்காதணிமோதிரமளித்துச் சிவிகையினேற்றி நகர் வலம்புரிவித்துச்சமாதாதனஞ்செய்விப்பவர், பூமியில் துன்பமின்றி சுகம்பெறவாழ்ந்து இஷ்டபோகங்களனுபவித்துப்பின் பச்சிவபெருமான்றிருவடி நிழலிற் சார்நதிருப்பது சத்தியமென்ற சூதபுராணிகரை அருந்தவர் மகிழ்ந்து அருச்சனை முதலியவுபசாரங்கள் செய்துபணிந்து துதிக்கவும், அச்சூதபுராணிகர் மகிழ்ந்தம்முனிவர்களை வாழ்த்தித்தமதாசிரமஞ்சார்ந்தனர்.

எல்லாம்வளர்க்கவல்லவளென்றபெயர்வரவுசசருக்கம்,

முற்றிற்று.

ஆக சருக்கம் கஙு-க்கு திருவிருத்தம் ரு௲அகஎ.

திருவைகாவூர்ப்புராணம் முற்றிற்று.

